# அழகர் கோயில் கல்வெட்டுகள்

ஆசிரியர்கள்
**பொ. இராசேந்திரன்**
முனைவர் **சொ. சாந்தலிங்கம்**
**சொ. சந்திரவாணன்**

பதிப்பாசிரியர்
முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்,** இஆப.,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

**தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை**
**எழும்பூர், சென்னை**
**2010**

# அச்சிட்டோர் விவரம்


| | | |
|---|---|---|
| புத்தகத்தின் பெயர் | : | அழகர் கோயில் கல்வெட்டுகள் |
| ஆசிரியர்கள் | : | பொ. இராசேந்திரன்<br>முனைவர் சொ. சாந்தலிங்கம்<br>சொ. சந்திரவாணன் |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இஆப., |
| வெளியீட்டு உரிமை | : | தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | முதற் பதிப்பு |
| பிரதிகள் | : | 1000 |
| நூல் வெளியீடு எண் | : | 219 |
| ஆண்டு | : | 2010 / திருவள்ளுவராண்டு - 2041 |
| பக்கங்கள் | : | 280 |
| எழுத்தின் அளவு | : | 12 புள்ளிகள் |
| தாள் அளவு | : | 80 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| விலை | : | ரூ. 85 .00 |
| அச்சிட்டோர் | : | சென்னை அச்சக தொழிற் கூட்டுறவு சங்கம் லிமிடெட்,<br>6, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி,<br>சென்னை-600 005. |
| வெளியிட்டோர் | : | தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை<br>தமிழ்வளர்ச்சி வளாகம்<br>ஆல்சு சாலை, எழும்பூர்,<br>சென்னை - 600 008. |


முன் அட்டை: பதினெட்டாம்படி கருப்பர் சன்னதி கோபுரம்
பின் அட்டை: வசந்தமண்டப சிற்பங்கள், கட்டி முடிக்கப்படாத தெற்குகோபுரம்

முனைவர் **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

தொல்லியல் துறை
தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஆல்சு சாலை, எழும்பூர்,
சென்னை-600 008.

நாள் : 25-03-2010

# பதிப்புரை

மதுரைப் பகுதி மக்களின் வாழ்வோடும், பண்பாட்டோடும் கலந்திருப்பது அழகர் கோயிலும் அதுசார்ந்த விழாக்களுமாகும். ஆண்டுதோறும் கொண்டாடப்படும் சித்திரைத் திருவிழா உலக அளவில் புகழ் கொண்டது. இக்கோயிலின் வரலாற்றுப் பெருமைகளைத் தாங்கிப் பல கல்வெட்டுகள் இக்கோயில் சுவர்களிலேயே உள்ளன. இவற்றைத் தொகுத்து ஒரு தனித் தொகுதியாக வெளிக்கொணர்வதில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை பெருமைகொள்கிறது.

அழகர் மலையில் இரண்டாயிரம் ஆண்டுகட்கும் முற்பட்ட தமிழ்பிராமி கல்வெட்டுகள் உள்ளமையை அனைவரும் அறியும் வண்ணம் "தமிழ் பிராமி கல்வெட்டுகள்" என்னும் நூலில் இத்துறை பதிப்பித்துள்ளது. கோயிற் கல்வெட்டுகள் மட்டும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. இருங்குன்றம், திருமால் இருங்குன்றம், திருமாலிருஞ்சோலை, சோலைமலை என்னும் பல பெயர்களில் இம்மலை அழைக்கப்படுகின்றது. திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம், ஆழ்வார் பாசுரங்கள் என பலவகைப்பட்ட இலக்கியங்களிலும் பேசப்பட்டுள்ளது இக்கோயில்.

சங்ககாலந் தொடங்கி இக்கோயிலின் இருப்பு அறியப்பட்டாலும் பிற்பாண்டியர், சோழர், போசளர், வாணாதிராயர், விசயநகர அரசர், மதுரை நாயக்கர் மரபினர் எனப் பல்வேறு அரச மரபினரின் ஆதரவைப் பெற்றுள்ளது. இம்மரபினர் காலத்தில் இக்கோயில் பெற்ற வளர்ச்சி, அறக்கொடைகள், மக்களின் பங்களிப்பு ஆகியவை கல்வெட்டுகளாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இத்தகைய கல்வெட்டுகள் 214 இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

மதுரை மாவட்டத்தில் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுகள் ஏற்கனவே இரண்டு தொகுதிகள் எம் துறையால் வெளியிடப்பட்டுள்ளது. மூன்றாம் தொகுதியாக இக்கோயில்

கல்வெட்டுகள் மட்டும் வெளிவருகிறது. இக்கல்வெட்டுகளை படி எடுத்துப் படித்து வெளியிடுவதில் பெரிதும் பங்களித்த எம் துறை தொழில்நுட்ப அலுவலர்கள் திரு. பொ. இராசேந்திரன், முனைவர் சொ. சாந்தலிங்கம், திரு. சொ. சந்திரவாணன் ஆகியோர் எனது பாராட்டுதலுக்குரியவர்கள். இத்தொகுதியை கணினி தட்டச்சு செய்வதிலும், அட்டைப்படம் வடிவமைப்பதிலும் உதவிய திருமதி. ச. சரஸ்வதி, அச்சுக்கோர்ப்பாளர் அவர்களுக்கும், அச்சுப்பிழை திருத்திய திரு மா. ஆ. சங்கர், முதுநிலை முதலாள் மற்றும் அச்சுப்பிரிவினர் அனைவருக்கும் எனது வாழ்த்துகள். தொடர்ந்து கல்வெட்டுத் தொகுதிகள் வெளிவர ஆக்கமும், நிதி நல்கை மூலம் ஊக்கமும் தந்து வரும் தமிழ்நாடு அரசிற்கு எனது நன்றி உரியது.

வட்டார வரலாறு ஆய்வாளர்கட்கும், பிற பண்பாட்டு, வரலாற்று ஆய்வாளர்கட்கும் இந்நூல் ஒரு புதிய வரவாகும். இதனை தமிழாய்வாளர்கள் அனைவரும் வரவேற்பார்கள் என்று நம்புகிறேன்.

**தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**

# முன்னுரை

மதுரை மாவட்டத்தில் கல்வெட்டுத் தீவிர முனைப்புத் திட்டத்தின் கீழ் கண்டறியப்பட்ட கல்வெட்டுகள் இரண்டு தொகுதிகள் நூலாக வெளிவந்துள்ளன. அழகர் கோயில் கல்வெட்டுகள் தனித் தொகுதியாக இப்போது வெளிவருகின்றது. இப்பகுதியில் நிகழ்ந்த அரசியல், சமுதாயம், பொருளாதாரம், சமயம், கலை போன்ற நிகழ்வுகளின் வெளிப்பாட்டினைத் தெரிந்துகொள்ள இக்கல்வெட்டுத் தொகுதி துணைநிற்கும்.

## அழகர் கோயில்

மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் அமைந்துள்ள இவ்வூர் மதுரையிலிருந்து வடதிசையில் 24 கி.மீ. தொலைவில் உள்ளது. ஊரின் பெயரும், கோயிலின் பெயரும் ஒன்றேயாகும். இயற்கை எழில் கொஞ்சும் அழகிய மலைச்சாரலில் அமைந்துள்ள இவ்வூர் கடல் மட்டத்திலிருந்து 900 அடி உயரத்தில் உள்ளது.

அழகர் மலையில் ஈராயிரம் ஆண்டுகட்கு முந்தைய சமணர் வாழ்விடங்களும், தமிழிக் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. (இத்தமிழிக் கல்வெட்டுகள் எம் துறை வெளியிட்டுள்ள தமிழ் பிராமிக் கல்வெட்டுகள் எனும் நூலில் இடம்பெற்றுள்ளன) சமணர்கள் வாழ்விடங்களைப் பல்வேறு வணிகர்கள் அமைத்துத் தந்தனர் என்பதை இங்குள்ள தமிழிக் கல்வெட்டுகளால் அறியலாம். இத்துடன் கி.பி. 9-10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டால் "அச்சணந்தி" என்னும் சமணத் துறவி இங்கு வாழ்ந்ததாக அறியமுடிகின்றது.

இவ்வழகர் மலைக்கு திருமாலிருங்குன்றம், இருங்குன்றம், திருமாலிருஞ்சோலை, சோலைமலை, திருவரை எனப் பல பெயர்கள் உண்டு. சிலப்பதிகாரத்தில் திருமால்குன்றம் என இம்மலையின் பெயர் குறிப்பிடப்படுகின்றது. இம்மலை அடிவாரத்தில் கோயில் கொண்டுள்ள அழகரை (திருமால்), பூதத்தாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் நாச்சியார் ஆகியோர் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

இம்மலையின் மீதுள்ள முருகனின் அறுபடை வீடுகளில் ஒன்றான பழமுதிர்சோலையினைப் பற்றி நக்கீரர் தம் திருமுருகாற்றுப்படை நூலில்

இழுமென இழிதரும் அருவி

பழமுதிர் சோலை மலை கிழவோனே

எனக் குறிப்பிட்டுள்ளார்.

சங்க காலம் தொடங்கி இன்று வரை இங்கு காணப்படுகின்ற கல்வெட்டுச் சான்றுகளில் முற்காலப் பாண்டியர் காலக் கல்வெட்டுகள் ஏதும் கிடைக்கவில்லை. இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுகளில் காலத்தால் முந்தையது சோழ மன்னன் முதலாம் இராசராசனின் காலத்தியதாகும். இம்மன்னனின் 26-ஆம் ஆட்சியாண்டில் இக்கோயிலுக்குத் தரப்பட்ட தானம் பற்றிய கல்வெட்டே பழமையானது.

இக்கோயிலில் சிறியதும், பெரியதுமாகச் சுமார் 200க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் காணப்படுகின்றன. சிதைந்த நிலையிலும், பொறிந்த நிலையிலுமாகக் காணப்படுகின்ற கல்வெட்டுகளின் மூலம் பல புதிய செய்திகளை அறிந்துகொள்ள முடிகின்றது.

பிற்காலப் பாண்டிய மன்னர்கள் மரபினில் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டுகள் மூலம் இக்கோயிலுக்குப் பல நற்பணிகள் செய்துள்ளமை தெரிகின்றது. இரண்டாம் திருச்சுற்றின் வெளிப் பகுதியில் காணப்படுகின்ற கல்வெட்டுகளில் பழமையானது ஜடாவர்மன் முதலாம் குலசேகரனின் காலத்தியதாகும். இம்மன்னனின் காலத்திலோ அன்றி இவனுக்கு முன்போ இத்திருச்சுற்று கட்டப்பட்டிருக்க வேண்டும் எனலாம்.

போசள மன்னன் வீரசோமேசுவரன் தன் பெயரால், வீரசோமேசுவரன் சந்தி என்ற சந்தி வழிபாட்டை ஏற்படுத்தி இருந்தான். பாண்டிய மன்னர்களுக்குக் கட்டுப்பட்டிருந்த வாணாதிராயர்கள் என்ற குறுநில மன்னர்கள் மிகுந்த வைணவப் பற்றுடையவர்கள். அழகர் கோயிலுக்கு இவர்கள் பல்வேறு திருப்பணிகள் செய்துள்ளனர். இவர்கள் திருமாலிருஞ்சோலை நின்றான், மாவலி வாணாதிராயர்கள் என்ற சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்டனர். கி.பி. 1464-ஆம் ஆண்டில் அழகர் கோயில் உபானாதி ஸ்தூபி பரியந்தம் திருப்பணி செய்யப்பட்டதாக இங்குள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

விஜயநகர மன்னர்கள் காலத்தில் கிருஷ்ணதேவராயர் இக்கோயிலில் மூன்று நாட்கள் தங்கியிருந்ததை ஒரு கல்வெட்டு மூலம் அறியமுடிகின்றது. இம்மன்னர்களைத் தொடர்ந்து திருமலை நாயக்கர் காலத்தில் மூன்றாம் திருச்சுற்று கட்டப்பட்டது. இவர்கள் காலத்தில் படை வீரர்கள் இங்கு தங்க வைக்கப்பட்டிருந்தனர் என்பதும் கல்வெட்டால் அறியமுடிகின்றது. அழகர்கோயில் கிழக்குக் கோபுர வாயிற்படிகள் பதினெட்டாம் படிக் கருப்பசாமியாக மக்களால் வழிபடப்படுகின்றது.

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் (கி.பி. 13-ஆம் நூற்றாண்டு) பல அரிய செய்திகளைத் தருகின்றன. மொன்னைப்பிரான் விரத முடித்த பெருமான் ஆன முனையதரையன் என்பவன் இக்கோயில் இறைவர் மீது மிகுந்த பற்று கொண்டு தம் பெயரால் திருமண்டபம், அலங்கார மண்டபம், தாங்கு தூண்கள் எனப் பல திருப்பணிகள் செய்ததைக் கல்வெட்டுகளால் அறியமுடிகின்றது. இம்மண்டபம் இன்றளவும் அவன் பெயராலேயே முனையதரையன் மண்டபம் என்றே அழைக்கப்படுவது சிறப்புடையதாகும்.

இதேபோன்று மன்னன் பெயரால் சுந்தரபாண்டியன் குறடு மண்டபம் என்றழைக்கப்படுகின்ற மண்டபம் கருடமண்டபம் என்றும் அழைக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. இம்மண்டபத்தில் அழகரை எழுந்தருளச் செய்யும்பொழுது நடைபெற்ற திருவாராதனை, திருத்தளிகைக்கான பொருட்கள் என்னென்ன என்பதை ஒரு கல்வெட்டு பட்டியலிட்டுக் கூறுகின்றது. இத்திருவாராதனைக் கட்டளைக்கு ஏற்பாடு செய்யும் வணிகப் பொருள் கடைக்கு ஏற்ப பணம் செலுத்தியதைத் தெரிவிக்கின்றது.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்று திருமாலிருஞ்சோலைப் பெருமாள் ஆண்டாள் நாச்சியாரின் பாடலைக் (கோதைப் பாட்டு) கேட்டு மெய்மறந்து நின்றதைப் பற்றித் தெரிவிக்கின்றது. வேறொரு கல்வெட்டு மன்னன் சுந்தரபாண்டியனின் மனைவி திருவுடையாள் என்பவர் இக்கோயில் இறைவிக்கு கொடுத்த எட்டு நொந்தா விளக்குகள் பற்றித் தெரிவிக்கின்றது. மேலும் இக்கோயிலுக்கு வருகின்ற சந்நியாசிகள், ஏகாந்திகள், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு (சித்தாகாரம்) சிற்றுண்டி கொடுக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது. மேலும் இங்குள்ள கல்வெட்டு ஒன்றில் வைகை ஆற்றின் பெயர் "வைகையான ஸ்ரீவல்லபப் பேராறு" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதேபோன்று மேட்டுகிருஷ்ண மண்டபம், படியேத்த மண்டபம், தொண்டைமான் கோபுரம் முதலானவை, இவ்விறைவன் மீது பக்தி கொண்ட நபர்களின் பக்தியின் வெளிப்பாடாக அவர்கள் பெயருடன் நின்று நிலைத்துள்ளது. மேலும் இக்கோயிலுக்கு அருகில் திருமலை நாயக்கர் மண்டபம் ஒன்று தொல்லியல் துறையால் பாதுகாக்கப்பட்ட சின்னமாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றது. இங்குள்ள நர்த்தன மண்டபத்தின் மேடையில் வலப்புறம் உள்ள கல்வெட்டு, இம்மண்டபத் தூண் ஒன்றைக் கொடுத்தவர் பெயர் குறிப்பிட்டு நிற்கின்றது. இம்மண்டபம், மன்னர் திருமலை நாயக்கர் இங்கு எழுந்தருளும்போது நடன அரங்கமாகத் திகழ்ந்தது எனலாம்.

வைகானச ஆகமப்படி வழிபாடு நடத்தப்படுகின்ற இவ்வழகர் கோயில் ஆறு திருச்சுற்றுக்களைக் கொண்ட ஒரு பெரிய கோயில். நுழைவாயில் கீழ்க்கோபுரம் காண்போர் கண்ணைக் கவரும் தன்மையது. கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்று முறையான கட்டடக்கலை அமைப்புடன் காணப்படுகின்றது. கருவறை அதிட்டானப் பகுதி உபானம், ஜகதி, குமுதம், யாளி வரி, பூத வரி, கண்டம், பட்டி என்ற கட்டடக் கலை உறுப்புகளுடன் காணப்படுகின்றது. அடி முதல் கூரைப் பகுதி வரை கருங்கல்லால் ஆனது. கூரைக்கு மேல் வேசர வடிவ விமானம் காணப்படுகின்றது. இது சோமஸ்கந்த

விமானம் எனப்படுகிறது. செங்கல் மற்றும் சுண்ணாம்பால் ஆன விமானம் இஃது. மூலத்தானத்துள் கோயில் கொண்டுள்ள இறைவர் அழகர் என்றும் கள்ளழகர் என்றும் அழைக்கப்படுகின்றார்.

இக்கோயில் இப்பகுதி மக்களின் வாழ்வோடும், பண்பாட்டோடும் பின்னிப் பிணைந்துள்ளது. அரசினரும், மக்களும் இக்கோயிலின் வளர்ச்சியிலும், வாழ்விலும் பெரிதும் அக்கறை கொண்டுள்ளனர். மக்களின் ஈடுபாடும், பங்களிப்பும் இக்கோயில் சுவர்களில் ஆவணங்களாகி நிலைத்துள்ளன.

# INTRODUCTION

The intensive Epigraphical Campaign launched by the Commissioner of Archaeology is yielding fruitful result in the Publication of Epigraphical volumes. This volume also is one among such fruits. The inscriptions copied in Madurai District have already been published in two volumes and this present volume is a third one which contains the inscriptions copied from Alagarkoil, the popular religious centre located some 24 Kilometres north of Madurai, and these inscriptions throw much light on the Political, Cultural, Economical, Religious and art history of this particular area.

Alagarkoil, which also popularly known by certain other names like; "Thirumaliruncholai" "Thirumalirun Kundram" "irunkundram" "Solaimalai" and "Thiruvarai" is a popular religious centre atleast from the Sangam age, if not earlier as it is undoubtedly proved by the 'Tamil Brahmi Inscriptions' noticed in this hill.

The deity Alagar enshrined in the Kallalagar Temple located at the foot of this hill has been praised and worshipped in a number of hymes especially by 'Bhuthathalwar', 'Nammalwar', 'Thirumangai Alwar'. 'Periyalwar' and 'Andal'. These hymns prove beyond doubt the antiquity of this Vaishnavite Centre. 'Palamudhircholai' which is considered as one among the six Sacred abode of Murugan also is identified with this hill.

As far as the inscriptions copied from Kallalagar Temple the earliest one dates back to the period of the Chola king Rajaraja I and then we have the inscriptions of the later Pandya rulers like Maravarman Sundara Pandya I, Jatavarman Sundara Pandya I etc., From the inscriptions of the later Pandya rulers it is clearly understood that a certain Monnaippiran Viradhammuditha Perumal alias Munaiyadharayan has evinced keen interest in constructing certain Mandapas and erecting certain Pillars. Even to day the mandapa constructed by this Munaiyadharayan is popularly known as "Munaiyadharayan Mandapa" after his name. Likewise the mandapam which is now known by the name Sundara Pandiyan Kuradu is playing an important role in certain religious activities and ceremonies of this Vaishnavite Centre, starting from the period of Maravarman Sundarapandya I. From these facts it can be safely concluded that this Mandapa is in existence from the period of Sundara Pandya I (1216 - 1238 AD.). From an inscription noticed in the South

base of the Sundara Pandyan Mandapa it is known the gift of the village Vilathur with its hamlet Ilongoneri in Solapandya Valanadu for meeting out the expences of the sacred bath offerings etc., of the God Alagar and his consort seated in the Sundara Pandya Mandapa in every month, on the day of Uttiradam, the natal star of the king's elder brother (Annalvi). It is clear that this Mandapa was constructed in the Later Pandya period for conducting certain special worships to the deities. Further it is understood, that many individuals also had contributed liberally for the construction of this mandapa. The inscriptions engraved on the pillars speak about the individuals who have contributed for setting up of those Pillars individually. Kuttan Attiyur alias Sundara Pandya Vilupparaiyan a vellala residing at Thirumaliruncholai Venkurugur Nagaran Bhattan are the names of some donors that we can trace from these inscriptions.

An inscription of this temple records the provisions made for the recitation of the "Kothai Pattu" (hymns of Andal) before the deity. Another inscription records the remission of taxes at the instance of Ayyan Malavarayan, on the lands granted as devadana in Vanavan Madevi Chaturvedi Mangalam situated in Venbunadu for the offerings and other expenses of the god on the day of Sathayam in the month of Mina (Panguni) the natal star of Annalvi (elder brother) Sokkandar.

From the earliest inscription recorded in the second prakara wall. It can be safely concluded that this Vaishnavite temple is having the extensive area of two praharas atleast from the period of that Kulasekara Pandya who ruled this area from 1190 AD to 1216 AD.

The Hoysala rulers also have made their contributions to this temple. A special worship by the name "Veerasomeshwaran Sandhi" was instituted is this temple after the name of the Hoysala ruler Veerasomeswaran.

Vanadhirayas also have contributed their best to this Vaishnavite shrine by rebuilding the main shrine from base to the finial in the year 1464 AD. Hence the present shrine of Alagar can be safely dated back ro fifteenth century AD. These Vanadhirayas were very much pleased to have their names as "Thirumaliruncholai Nintran" after the name of the hill where the deity Alagar resides as they were the strong devotees of Kallalagar.

Among the Vijayanagar rulers Krishnadevaraya had come to this temple to worship Kallalagar and stayed here for a period of three days.

The third prakara wall of this temple seem to have been constructed during the reign of the popular Nayak ruler "Thirumalai Nayakar".

"Padhinettam Padi Karuppu a local guardian deity worshipped at the entrance of the eastern outer Gopura is now a days very popular and attracting a number of devotees from the surrounding villages of this area.

Thirumalai Nayakar Mandapam which looks like a theatre with a stage, where people can assemble in large number and can perform their religious Ceremonies and have eract their folk arts and dances.

Thus this temple is playing a crucial role in the religious and social life of the people of this area. Both the general public and the government have taking much care and interest in the upliftment of this temple. All the activities related with the temple and society are well recorded in the inscriptions engraved on the temple Walls.

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 208/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | - |
| ஊர் | : அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 270/1929-30 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : பிற்காலப் பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 1 |
| அரசன் | : - | | | |

இடம் : கள்ளழகர் கோயில் அர்த்தமண்டபம், கிழக்குச் சுவர் வெளிப்புறம்.

குறிப்புரை : மொண்ணை பிரான் விரதமுடித்த பெருமானான முனையதரையர் தனது பெயரால் மண்டபம் (மகா மண்டபம்) கட்டியதைத் தெரிவிக்கிறது.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ மிழலைக் கூற்றத்து நடுவிற்
2. கூற்றுப் புல்லூர்க்குடிப் பொந்பற்றி
3. யுடையான் மொண்ணை பிரான்வி
4. ரதமுடித்த பெருமாளான முனைய
5. தரையர் செய்வித்த முனைய தரை
6. யந் திருமண்டபம் ||-

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 2/1931-32 |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : பிற்காலப் பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 2 |
| அரசன் | : - | | | |

இடம் : கள்ளழகர் கோயில் முனையதரையன் மண்டபத்திலுள்ள (மகாமண்டபம்) தூண்.

குறிப்புரை : மிழலைக் கூற்றத்து நடுவிற்கூற்று புல்லூர்க்குடியைச் சேர்ந்த பொன்பற்றியுடையான் மொண்ணை பிரான் விரதமுடித்த பெருமாளான முனையதரையன் தன் பெயரால் செய்வித்த கோயில் அலங்கார மண்டபம் பற்றிக் கூறப்படுகிறது. இதே செய்தி அர்த்த மண்டபக் கிழக்குச் சுவர் கல்வெட்டிலும் இடம் பெறுகிறது.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ மிழலைக் கூ
2. ற்றத்து நடுவிற் கூற்று
3. ப் புல்லூர்க்குடிப் பொன்
4. பற்றியுடையான் மெ
5. ாண்ணைப் பிரான்விரத
6. முடித்த பெருமாளான
7. முனையதரையர் செ
8. ய்வித்த கோயில
9. லங்காரன் திருமண்
10. டபம் ॥-

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 213/1938-39 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பிற்காலப் பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 3 - 8 |
| அரசன் | : | - | | | |

இடம் : கள்ளழகர் திருக்கோயில் முனையதரையன் மண்டபம் (மகாமண்டபம்) தென்சுவர் உட்பக்கம்.

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டுகள். நாட்டானேம்பல் என்ற ஊரின் நான்கெல்லைக்குட்பட்ட நிலங்கள் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்டதைக் கூறுகின்றன. பிற்காலப் பாண்டியரின் மெய்க்கீர்த்திப் பகுதியிலும் கையொப்பம் இட்டவர்களின் பெயர் இடம் பெறுகின்றன.

## கல்வெட்டு :

I
1. றைச் செவ்வைக்கும்
2. . . . வார்களாகவும் யிக்குளத்
3. டுத்தோம் திருமாலிருஞ்சோலை
4. ன் சுப்பிரமண்(ணி)யன் எழுத்து

II
1. பாண் . . . .
2. கொண்டு வேனா வலைய . . .
3. . . வெந்திறற் கொன்றுஞ்சி ந . . .
4. திசைதொறுஞ் செயதம்பந் . . .
5. இருபத்தெட்டினால் சோழம . . .
6. . . மங்குடுத்த வில்லவன் கட்டளை

III 1. திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகள் கோயில் திருமாலிருஞ் சோ

2. ன் குருகுலத்தரையன் திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகள்

3. . . துப்பால் நாட்டானேம்பல் நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும்

4. சொன்னமையில் இத்திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகள்

5. . . நாடு இறுக்கும் படியிலே கடமை அந்தராயமும் தன்னடை நில அடி

IV 1. நூயங்கலத்து வடக்கு . . .

2. லை கூற்றத்து கீழ்கூற்று . .

3. லியாக இடப்பெறவேணுமெ

4. இப்படி சந்திராதித்தவற் செல்

V 1. ட்டத்துப்

2. . ப்புற இறையிலியாயி

3. . ருமணலூர் மந்திரி . . . இர . . .

VI 1. . ரையன் எழுத்து இ

2. . ச்சாதிரணல்லூர் தேவ

3. வல்லவ முதலியார்

4. . . தவான்றோய மா . . .

5. ள . . ககப்புறத்து

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : தமிழ் | | | |
| அரசு | : பிற்காலப் பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 9 - 14 |
| அரசன் | : - | | | |

இடம் : கள்ளழகர் திருக்கோயில், முனையதரையன் மண்டபம் தென்சுவர்.

குறிப்புரை : இத்துண்டுக் கல்வெட்டுக்களில் பிற்காலப் பாண்டியரின் மெய்க்கீர்த்தித் தொடர்கள் உள்ளன. சமையனேரி இறையிலியாக விடப்பட்டதும் அதிகாரிகள் சிலரின் பெயரும் காணப்படுகின்றன.

## கல்வெட்டு :

I

1. ல் எழுந்தருளியிருந்து கீழிரணிய முட் . . . .
2. ன் கெல்லைக்குட்பட்ட நிலம் அஞ்சாவதின்
3. நம்மோலை குடுக்க என்றும் இப்படி சந்திர . .
4. கரியான் செயதரப்பல்லவரைய னெழுத்து III–
5. . . வை அண்ட நாட்டு பெருமணலூர் ம . . .

II

1. ங்கலத்து . . . .
2. தமுடித்த பெருமாளான உடையார் மு . . .
3. தந்த சமையனேரியான அழகர் ச . . .
4. . . நேரி உள்ளிட்ட குளங்களுக்கும் வினி . . .
5. ருமாலிருஞ்சோலை நின்றானான வி . . .
6. ந்த நிலங் . . .

III 1. சலை சிஹாங்கனேரிக்கு மண் . . . .
2. யாசி எழுத்து பெருவாயில் கன் . . . .
3. முத்து இந்நாட்டுத் திருமாலிரு
4. முத்து திருப்பேற் நாராயண தி . . . .

IV 1. னல்லூர் தேவந் பெற்றானான (எநாதம்)
2. ாற்று தண்ணீரண்டக்குடியான் காணி . . .
3. பல்லவர் மகதர் விக்கலர் செம்பிய . . .
4. த்தருளிய மாடலுஞ் சிறப்பிற் ப . .

V 1. ங்கோனென்று திருவாய்மொழிந்தருளின . . .
2. குடிபொன்பற்றியுடையான் மொண்ணை பிரா . . .
3. ன் . . . பற்றாய் இவர் பக்கல் சுந்தர பாண்டிய ப .
4. யிடப்பெற வேணும் என்று இவ்வூரார் இறுக்கு . . .
5. க்கு மாத்தால் திரமம் அரையும் ஆக இப்படி . . .

VI 1. திறப்பார் ணெட முடமுந்த . . . த்தாமரை . .
2. கனங்கொன்று வந்தட்டதெணட இறுக்கு . . . மின
3. வாசியும் வாரணமும் தேரும் பற்றிருவிக் காணாளும்
4. நெதிரம் ஞான நிரமனங் குளிர வாங்க பன்றன் கட .
5. . ன்றேத்துலக முழுதுடையாளோரடும் வீற்றிருந்த . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 222 - 226/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 3/1931-32 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பிற்காலப்பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 15 - 19 |
| அரசன் | : | முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் | | | |

இடம் : கள்ளழகர் திருக்கோயில் முனையதரையன் திருமண்டபம் கிழக்குச் சுவர் உட்புறம்.

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டுகள். முதலாம் மாறவர்மனின் சோழ நாட்டு வெற்றி குறிப்பிடப்படுகிறது. திருமாலிருஞ்சோலைப் பெருமாள் ஆண்டாளின் பாட்டு (கோதைப்பாட்டு) கேட்டதை ஒரு துண்டுக் கல்வெட்டு கூறுகிறது. மற்றொன்று திருவிளக்கு எரிக்கப்பட்டதைக் கூறுகிறது.

## கல்வெட்டு :

I
1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந . . .
2. டியும் நம் கேழ்வியு . . . வரியிலார் எழு . .
3. மாம் மழது சரிதமாய்க்கிடந்த நிலங்க . .
4. ந்து நம் கோதைப் பாட்டு கேளா நிற்க
5. டுப்பித்த நம்மருக . . . புறத்து

II
1. டச்சோலை எழுத்து கூற்றவன் த
2. ஞ்சோலை நாரா . . . . சோலை நி . .
3. பரமஸவாமிகளும் . . ரு விளக்கு

III
1. னந்த நாராயணனெ . .
2. துவானுக்கு வ௺ . . .
3. ணிக் குடுத்த பரிசா . . .
4. ருஞ் சோலை நாராயண . . .

IV
1. ணகள் போலுங் கணை தனைத்த தென்னை
2. விடும் தூஷியும் ஒக்க கண்டோ
3. ற் சூலக்க வல்லிப் பலி கொள்க வெ
4. ந்த கொடு கொண்ட நெற்றிதற் கோபுரஞ்
5. ஹிஷேகம் பண்ணியருளிய ஸ்ரீசுந்தரபா . . .

V
1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இத்திருமாளி
3. கதியார்
4. த்திரமபெ
5. . மாள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 214/1938-39 |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பிற்காலப் பாண்டியர்கள் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 20 |
| அரசன் | : | - | | | |

இடம் : கள்ளழகர் திருக்கோயில், முதல் திருச்சுற்றுச்சுவர் மேற்குப் புறமதில் உட்பக்கம்.

குறிப்புரை : பவித்திரமாணிக்கபுரத்து நிலங்கள் பயிரேற்றி அவற்றின் வரிகள் இறையிலியாக அளிக்கப்பட்டதைக் கூறுகிறது.

## கல்வெட்டு :

1. ஸ்ரீபதியான பவித்ரமாணிக்கபுரத்து நம்ம
2. து பயிரேறி விளைந்த நிலங்களுக்கு நம் கன்மிகள்
3. முனையதரையனும் நம் வீட்டுக் காரியங் கேட்கி
4. கடமை அந்தராயம் நம் பேரன் சுந்தரபாண் . . .

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | - |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | நாயக்கர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 21 |
| அரசன் | : | - | | | |

இடம் : முதலாம் வடபுற திருச்சுற்றுமதிள் உட்பக்கம்.

குறிப்புரை : திருமாலிருஞ்சோலை திருப்பதியில் பணி செய்யும் பல்வேறுபட்ட பணியாளர்கள் அவர்களுக்குரிய ஊதியம், கடமைகள் பற்றி சிதைந்துபோன இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. வாணாதிராயர் நாளையில் நடைபெற்ற முறை பற்றி இது கூறுகிறது.

## கல்வெட்டு :

1. . . . . நடந்து வந்த . . . . . . . சவுந்தரமான அமுதாரும் . . . . . . மலை நம்பியும் கோபநம்பியும் தெய்வசகாய . . . . . . . திருமாலிருஞ்சோலை நம்பியும் வீரசைக்க . . . . அழ . . . . . . . . . கடவோம் ஆக . . . . இராமராச திருமலைதேவனு (நாச்சிலும்) ஸ்ரீஅமுதாரில் . . . . . . . . . .

2. . . . . . . தோட்ட . . . . . . கள் இரண்டு . . . . . ஜெகமே பத கணக்கு இரதி . . . . அமுதாரும் சேர நாராயண . . . . யில் கணக்கு குலசேகர பட்டனுக்கு வந்த . . . . ராயனும் ஆக இவ்வனைவோமும் . . . . இர . . . ம் தம்மை பற்றும் எப்பேற்பட்ட வற்க்கத்தா . . . த்து . . . கொள்ள கடவோ . . . .

3. . . . . மைக்கு உபையமாக நடக்க கட்டளையிட்ட திருமலை . . . . . உபையமாக கட்டளை இட்ட திருஆற்ற . . . . . பாகம் ஒன்றும் ஆக சிரி . . . . பாகம் இருபத்துநாலு . . . . . . வாணாதிராயர் நாளில் நடந்துவந்த

பங்கு இலக்கை பரிவட்ட . . . . ஒன்றுக்கு . . . . . ஒன்றுக்கு . . . . . கொண்டுவர . . . . ஒன்று . . . . திருப்பதி . . . . சோழிய . . . கை . . . ஒன்று

4. . . . லிருஞ்சோலைக்கு பங்கு ஒன்றும் . . . . நடந்துவந்த தமக்கு . . . . சடகோபநம்பி ஆள் ஒன்றும் . . . . நிமந்தங்களும் முட்டாமல் செய்து காளாங்சி சம்போற்றி

5. . . . த்து . . . தேவ . . . . ருவிடை ஆட்டமாக விட்ட கிறாம . . . . லிலுக்கு குடுத்த இச்சீர்பாதம் தாங்கி . . . . . கோயில் ஆள் ஒன்றுக்குமான . . . . . யண அமுதாரும் சோழிய . . . . கணக்கு முதல் நம் விறுத . . . .

6. க் கணக்குத் தினசரி கணக்குக்கு . . . ண்டான் இலக்கைபடி அவந்தர . . . . . . . கொண்டு . . . . . வோடமாக . . . . . . உண்டானது சோலை . . . க்கு இக்கோயில் நம்பி இருபத்துக்கும் சடகோப நம்பி அரைபங்கு திருமாலிருஞ்சோலை நம்பி . . . இவனுக்கு . . . . னார் இட இவர்களுக்கு . . . . . .

7. மற்றுண்டான . . . . . உண்டான நாமுது செயிது பூறுவ உண்டான . . . . பற்றிக் கொள்ள கடவராகவும் . . . . . . சோமாரியா(ர்) ஒரு சம்பிறுதம் சொ . . . . வகைக்கும் செம்பிறுதியம் ஆக இரண்டு சம்பிறுதயம் கண . . . . முத்தரைக்கு சாமானியர்

8. . . . குடுத்து இதுக்கு . . . . . .

9. . . . . நம்பி . . . . தாக . . . . கவும் மகாளா . . . . . . இந்த கட்டளை . . . . யிலே அதிகமாக நிறைந்தே உண்டானால் அழ . . . . ளுக்கும் மதுரோதி . . . . ஆயினகோன் முத்தரையினா . . . . வமாக . . . . . இப்படிக்கு

10. . . . . குடுத்தோம் அமுதார் . . . . . குடுத்து . . . . நம்பி எழுத்து . . லை நம்பி எழுத்து சடகோப நம்பி எழுத்து . . . . . . . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 229/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | இரண்டாவது |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர்கோயில் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | - |
| மொழி | : | தமிழ் | முன் பதிப்பு | : | - |
| எழுத்து | : | தமிழ் | | | |
| அரசு | : | பிற்காலப் பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 22 |
| அரசன் | : | - | | | |

இடம் : கள்ளழகர் திருக்கோயில் முதலாம் திருச்சுற்று கிழக்குச்சுவர் வெளிப்புறம்.

குறிப்புரை : அரசன் ஆணையும் ஆட்சியாண்டும் சில ஊர்ப்பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன. தொடக்கமும் முடிவும் இல்லை.

## கல்வெட்டு :

1. . . . சொன்னமையில் இப்படி இறு . . .
2. . . ப்படிச் செல்லப் பண்ணி இப்படி . . .
3. . (செ)ம்பிலும் வெட்டிக் கொள்க . . .
4. . . ல்லூர் குறிச்சி உலக முழுதுடையாந்தேவ . . .
5. . . யாண்டு உவது நாள் (ா) உ௰(க்கு) இவைக்கு
6. . . லையன் நல்லூர் அரையன் பின் பழகி . . .
7. . . யாஜன் எழுத்து ॥- இவை கருங்குடி . . . .

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 2 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி.1215 - 1239<br>கி.பி 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 23 |
| அரசன் | : | மாறவர்மன் சுந்தரபாண்டியன் கோனேரின்மை கொண்டான் | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் கிழக்குச் சுவர் வெளிப்புறம்.

குறிப்புரை : மாறவர்மன் சுந்தர பாண்டியனின் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் முதற் கல்வெட்டு கல்வெட்டுச் செய்திகளைத் தராமல் முடிந்து விடுகின்றது. இதன் கீழ் வேறு கல்வெட்டு (கோமாற பன்மனின் கல்வெட்டு) காணப்படுகின்றது. அக்கல்வெட்:டு இக்கோயில் வைஷ்ணவர்கள் மற்றும் கோயில் பணியாளர்களுக்கு கொடுக்கப்பட்ட பிரசாதக் கட்டளைக்கு நில தானம் கொடுக்கப்பட்ட செய்தியினைத் தருகின்றது.

## கல்வெட்டு :

1. பூமலர்த் திருவும் பொரு செய மடந்தையும் தாமரைக் குவிமுலை சேர்புயத் திருப்ப வேதநாவில் வெள்ளிதழ்த் தாமரைக் காதல் மாது கவின் பெறத் திளை
2. ப்ப வெண்டிரை யுடுத்த மண்டினிக் கிடக்கைக் கிருநில மடந்தை உரிமையிற் களிப்பச் சமையமு நீதியுந் தருமமுந் தழைப்ப இமையவர் விழாக் கொடி (இட)ந்தொறும் செ
3. மடுப்ப கருங்கலி கனல் கெடக் கடவுள் வேதியர் அருந்தொழில் வேள்விச் செங்கனல் வளர்க்கச் சுருதியுந் தமிழும் (சொல்)வளங் குலவப் பொருதிற லாழிபூத(லஞ் சூழ்)
4. வர ஒருகை இரு செவிமும் மதனாற் கோட்ட யிராவத முதற் செயிற் தீர் கொற்றத் தெண்டிசையானை யெருத்தமேறிக் கண்ட நாடு எமதெனக் கயல்களி கூற கோசலந்

5. முந்துளுவங் கதிரங்குச்சரம் போசலம கதம் பொப்பளம் புண்டரங் கலிங்கமீழம் கடாரங் கவுடம்
6. அட்டம தெலிங்கஞ் சோனகஞ் சீன முதலா விதிமுறைதிகழ வேறு வேறு வகுத்த முதுநிலக் கிழமையி
7. தன் முடிபுனை வேந்தர்க் கொருதனி நாயகன் என்றுலகேத்த திருமுடி சூடிச் செங்கோலோச்சி கொற்
8. றத்தாளக் குளிர் வெண்குடை நிழல் கற்றைக் கவரிக் காவலர் வீச மிடைகதிர் நவமணி வீரசிங்காசனத்து உடன்முடிசூடியு
9. யர் குலத் திருவெனப் பங்கயமலர்க் கரங்குவித்துப் பார்த்திபர் வர மங்கையர் திரண்டுவணங்கும் சென்னியிற் சுடரொளி மவுலிச் சுடர்மய
10. மேலிடச் சிவந்த இணைமலர்ச் சீரடி மதுகரங்கமலமென்றனுகும் உலகமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய
11. கோமாற பன்மரான
12. திரிபுவனச் சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் கீழிரணிய முட்டத்து திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமஸ்வாமிகள் கோயில் திருப்பதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் பரமஸ்வாமிக்கும் உண்ணாமுலை
13. சொக்காண்டார் தாயாரிந்த சந்ததியுந் தவித்து காள சிங்க . . வரூஸாதஞ் செய்தருளிக் கண்ட திருநாளுக்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு வெண்பு நாட்டு வானவன் மஹாதேவிச் சதுர்வேதி மங்கல
14. த்துப் பிடாகைப் பற்றான வி . . . எல் இப்பரந்தாமன் . . . கடவோம் மாகிவ் அந்தராயம் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறுமற்று
15. ம் எப்பேற்பட்டனவுமுட்பட இரண்டாவது முதல் தேவதான இறையிலியாய் இறுப்பதாக இடப்பெறவேணுமென்று நாடு பிடித்தவர்களும் மறவரும் வன்பற்றாய் பற்றின நிலமும் இந்நாட்
16. டு இ வானவன் மஹாதேவிச் சதுர்வேதி மங்கலத்து . . . . பற்றான மாசகன்னி இப்பற் . . . . . . . மானம் பெற்று கைக்கொண்டு நிலமும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப் பாட்ட
17. மும் பஞ்சுபீலி சந்தி விக்கிரகப் பேறும் மற்றுமெப்பேற்பட்ட அமுதுபடி இவ்வாண்டு முதல் தேவதான இறையிலியாய் இறுப்பதாகவும் நாடு பிடித்தவர்களும் மற்றும் வன்பற்றாய் பற்றின நிலமுமிந்
18. நாட்டுக் குலை சேகர . . . . . . . யம் மந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப் பாட்டமும் பஞ்சுபீலி சந்தி விக்கிரகப் பேறும் மற்று

19. (மெய்பேற் பட்டனவும்) . . . முதல் சந்திராதித்தவர் செல்வதாக . . . . . . . . . மட்டுவாய் . . . . னெழுத்து . . . . (உள்)வரியும் தரச் சொன்னோம். இப்படி கைக்கொண்டு திருநாளெழுநாளே வீசத் திருப்படி

20. . . . . . . மும் செல்லப் பண்ணி இப்படிச் சந்திராதித்தவல் செல்வதாகக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக்கொள்ளவும் அண்டநாட்டுப் பெருமணலூர் அரையன் குலசேகர தேவனான

21. . . . . . . கு யாண்டு இரண்டு நாள் நூற்றுப் பத்தினால் . . . . . மங்கலத்தும் சதுர்வேதிமங்கலத்து . . . . . . திறந்தவாள் சுடரான விசையன் எழுத்து இவை . . . குடநாட்டுத் (திருமாலிருஞ்) சோலை நல்லூர் கணக்கு இரட்டையன் சேரமானெழுத்து உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 24 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று சுவர் கிழக்குப் பக்கம்.

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டாக உள்ளது. நிலதானம் பற்றிய செய்தி காணப்படுகின்றது. இந்நிலதானத்திற்கான நான்கெல்லைகள் மற்றும் இவ்வெல்லைக்குள்பட்ட குளம், தோட்டம் முதலானவையும் வாணாதராயர் மன்னருக்குச் சொல்ல தானமாக முனையதரையர் என்பாருக்குக் கொடுக்கப்பட்டதைத் தெரிவிக்கிறது.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கர(வத்திகள்) . . .
2. த்தது ஸிவண்ண தெ . . . . . . . .
3. க்கோன் பற்றி வடை . . . . . . . .
4. படின கொல்லன் கு . . . . . . . . .
5. செய் புஞ்செயு நத்த(மும்)
6. வாணாதராயன் நமக்குச் சொன்ன(மையில்) . . .
7. குளமுங் கண்ணங்குடியுங் . . . . . .
8. முந் தோட்டமுங் . . . . .
9. (செ)ான்னமையில் தன்காணியாய் இம்முனையதரையர்க்கு ஒற்றியாய் செ . . . றிப் பச் . . . . .
10. படிக் கொல்லன் குள நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமுங் கருஞ் செய்யும் . . . . . .

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 20+3 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 25 |
| அரசன் | : | கோனேரின்மை கொண்டான் | | | |

இடம் : முதல் திருச்சுற்று சுற்றுச் சுவர் கிழக்குப் பகுதி

குறிப்புரை : இக்கோயில் இறைவன் பேரில் பற்று கொண்ட தடங்கண்ணிச் சிற்றூருடையானான சோரன் உய்ய நின்றாடுவானானான குருகுலத்தரையன் என்பான் செய்த நிலதானம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கின்றது இவன் தன்பேரால் வைத்த சந்திக்கு வேண்டிய திருப்படி மாற்றுள்ளிட்டனவுக்கும் இக்கோயில் வைஷ்ணவர்கள் தேவைக்குமாக இத்தானம் வழங்கப்பட்டது. மேலும் இக்கல்வெட்டை வெட்டிய சிற்பாசாரியன் பெயரும் கல்வெட்டின் முடிவில் காணப்படுவது சிறப்புடைய ஒன்று.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ *திரிபு*வனச் சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளின பரம*ஸ்வா*மி திருக்கோயில் திருப்பதி ஸ்ரீவெஷ்ணவர்களுக்குத் திருமல்லி நாட்டுத் தடங்கண்ணிச் சிற்றூருடையானான சோறன் உ
2. ய்ய நின்றாடுவானான குருகுலத்தரையன் இப்பரமஸ்வாமிகளுக்குத் தன்பேரால் (அமுது) காலம் குருகுலத்தரயன் சந்திக்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு வடதலைச் செம்பி நாட்டு கீழைக் கோடுமளூரான மதுரோதைய நல்
3. லூர் அரயன் திருவால்வாயுடையானான சுந்தரபாண்டிய சேதிராயன் காணிக்கும் (திருநாம)த்துக் காணியாக விலை கொண்டு இவ்(அழ)கிய பாண்டிய குளக்கீழ்ப் பெருமாறனூரான பல மண்டலாதித்த நல்லூர் அழகிய பாண்டியப் பேரேரி மடைப்ப

4. ற்று விலையோலைப்படி நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும் கருஞ்செய் புன்செய் (நத்தப்) பாழும் நத்தமும் குளமுங் குளப்பரப்பும் மெப்பேர்ப்பட்ட நிலம் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப் பாட்டமும் பஞ்சுபீலி சந்து
5. விக்கிரகப் பேறும் மற்றும் எப்பேற்பட்டனவும் உட்பட இருபதாவதின் எதிர் மூவாமாண்டு முதல் தேவதான இறையிலியாக இடப்பெற வேணுமென்று மழவராயர் நமக்குச் சொன்னமையில் இப்பரமஸ்வாமிகளுக்கு குருகுலத்தரையன் தன்பேரால் கண்
6. ட அமுது காலம் குருகுலத்தரையன் சந்திக்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு இன்னிலம் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரியவாராட்சியும் வெட்டிப் பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப் பேறும் மற்றும் எப்பெயர்
7. பட்டனவும் . . . . . . . (தேவ)தான இறையிலியாகத் தரச்சொன்னோம் இதைக் கொண்டு திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்கள் செல்லப் பண்ணி இப்படி சந்திராதித்தவர் செல்வதாகக் கல்லிலுஞ் செம்பிலு
8. ம் வெட்டிக் கொள்க . . . . . . செம்பில் நாட்டு நல்லூர்க்கும் சசியுடையான் . . . . . . . யான் தேவதான செம்பியதரயனெழுத்து யாண்டு உ . . . . . ருயக இவை கருங்குடி நாட்டு கீழ் (நெட்டு)ரான சிதவிசயாலைய நல்லூர் நக்கன் ம
9. கனான விழுப்பாயிராஜன் எழுத்து॥உ இவை கருங்குடி நாட்டுக் கீழ் நெட்டுரான சித்தி விசயாலைய நல்லூர் நக்கன் இரட்டையான் தொண்டைமான் எழுத்து . . . கல்லில் வெட்டினேன் சிற்பாசாரியன் பாதூ*வாரயி* வலை வீசு வானான *ஓா*
10. ரு காதங் கோயிலாசாரியன் எழுத்து॥உ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 233/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | சகம் 1578<br>கி.பி. 1656 |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு<br>ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு<br>எண் | : | 26 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் வெளிப்புறச் சுவர் கீழ்ப்புறம் நுழைவாயிலின் வடபுறம்

குறிப்புரை : இவ்விறைவன் மீது பற்றுக்கொண்ட அன்பர்கள் சிலர் தந்த தானச் செய்தி குறிப்பிடப்படுகின்றது. இவ்விறைவர்க்கு ஆடித் திருநாள் பத்து நாட்கள் நடந்தது என்பதும், அதற்காக விடப்பட்ட கிராமம் (சிற்றூர்), நிலத்தானம், கோயில் வைஷ்ணவர்கள் தேவைக்கும் விடப்பட்ட தானம், பூசைக்கு வேண்டிய பூசைப் பொருட்கள் பற்றிய செய்தியும் தெரிவிக்கின்றது.

**கல்வெட்டு :**

1. *ஸமஹஸ்ரூ* *ஸ்வஸ்திஸ்ரீ* *ஸகாஸ்தூ* சூருளஎ௰அ இதன்மேல் செல்லா நின்ற
2. அண்ணாவிப் பெருமாபிள்ளைய் குணநலநயினா பிள்ளை
3. மண்டபத்துக்கும் எதிரான திருமுத்தத்தில் னாலுகால் மண்டபத்து
4. கட்டளைக்கும் திருவாடித்திருனாள் பத்துனாளைக்கும் இயல் சேவித்து ஸ்ரீ வைஷ்ணவர்கள் கதியான் குளத்துக்கு
5. விட்ட கிறாமம் விசெய ஸ்ரூ வைய்யாசி *மீ* உ வ அக்கிராமம் உண்டானவகவும் கிறையமாகக் கொண்டு விட்டது தே
6. வர் ஸ்ரீ மருதூர் அகூஹாரத்தில் கொண்டு விட்ட பங்கு இரண்டும் துன்முகி ஸ்ரூ ஆவணி *மீ* . . . காணிக்கிராம கருஞ்
7. செய் புஞ்செய் மாவடை மரவடை சகல ஆதாயமும் ஆக இரண்டு காயமும் இரண்டு பங்கும் கோயில் பண்டாரத்துக்கு பேர்
8. உண்டான சகல ஆதாயமும் கோயில் பண்டாரத்திலே அனுபவித்துக் கொண்டு . . . மகா திருமுகப்படிக்கும் தான வினி(யோகக்)

9. கட்டளைக்கு னாளொன்றுக்கு அமுதுபடி குறுணி னானாழி நெய்ப்படி ஒன்று பருப்பு இரண்டு படி இதுக்கு செல்லத்தக்க . . . .

10. அரைக்கால் சாம்பிராணி பலம் அரைக்கால் ஏலம் பலம் அரைக்கால் திருவிளக்குக்கு நெய்படி கால் சுவர் திருப்பரிவட்டம் விலை . . . .

11. சுவாமி தலையருவிக் கெழுந்தருளிகிறதுக்கு அனுமன் கோயில் மண்டபச் சிறப்புக் கட்டளைக்கு விடுகிறதுக்கு அதிரசம் எண்பது வடை அன் . . . . .

12. கட்டுகளும் கொண்டு ஆகத் தளுகை னாலுக்கு அமுதுபடி ஆறு மரக்கால் நெய்யும் எட்டு படி . . . குறுணி இரண்டும் தயிர் அரை நாழியும் . . .

| த.நா.அ. தொல்லியல் துறை | | | தொடர் எண் : | | 234/2003 |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 26 Part II |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் வெளிப்புறச் சுவர் கீழ்ப்புறம் நுழைவாயிலின் வடபுறம்

குறிப்புரை : தொடக்கம் இல்லாத இக்கல்வெட்டு இக்கோயில் இறைவர்க்கு நடைபெற்ற அமாவாசைத் திருநாளுக்கு வழங்கப்பட்ட பூசைப் பொருட்கள், தளிகைப் (உணவுப்)பொருட்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றது. இவ்வமாவாசைத் திருநாள் மாதந்தோறும் நடைபெற்றது என்பதும், அதற்கான தேவைப் பொருட்கள் முட்டாமல் நிகழவேண்டும் என ஓம்படைக்கிளவி அமைத்துக் கூறப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. கல்வெட்டின் முடிவில் வடமொழிச் சுலோகமும் தரப்பட்டுள்ளது.

## கல்வெட்டு :

1. . . . . . . . . . . . . . . . . . .

2. ஒன்றுக்கு ஏகாதெசி இரண்டுக்கும் அமாவாஸை . . . . உப்பு இரண்டுக்கும் ஆக மாதமொன்றுக்கு மண்டபத்திலே எழுந்தருளுகிறது விசேஷக் கட்டளை மாதமொன்றுக்கு னானாழி கலம் . . . . . .

3. னாள் நாற்பத்தெட்டுக்கு நாளொன்றுக்கு விட்டு வருகிற . . . மத்திரக் கட்டளை பெரிய வடைத் திருப்பணியாரம் பன்னிரண்டு வட . . . . ய குப்பாய மிரண்டு பானகம் சம்ப . . . க்கு கைகூட இரண்டும் அடைக்காயமுது முப்பது

4. இருனாழி வடை குறுவை . . . . இருனாழி நெய்யமுது இருகலமும் பருத்த வடை புளியோதரைக் கோட்டை அமுதுபடி இருகலம் பானகக் குடினத்துக்கு . . . . . சிகை கூடத்து அடைக்காயும்

5. அமுதும் ஐஞ்*ஞூ*றும் இலையமுது அய்ஞ்*ஞூ*று சந்தனம் பெரும்படி யிரண்டு கறியமுது வகையாளும் பால்பழம் இவிளக்கும்பழ முதலானதும் இபல சேவிக்க ஸ்ரீவைஷ்ணவர்கள் ததியாராதனத்து

6. க்கு திருணைமத் திருமால் புத்தூர் . . . னைக்கும் தினங் கலஅமுதுபடியாகப் பதிபாத . . . அமுதுபடிப் புளியோதரைக் கோவையும் கறியமுது ஊறுகாய் வகையாளும் நாள் பத்துக்குப் பத்தும் பெருமா

7. ளும் படித் . . . . தலமும் செய்யத்தக்க அடைக்காயிலையமுதும் இந்தப்படிக்கு நாலு வகையமுதுக்கு தரக் . . . . தினம் பத்து படிக்கு கோட்டை ஸ்ரீ பண்டாரத்திலே சந்திராதித்தவரை

8. *ஸஞதி வ͜டெவஶ* விட்டு நடத்திவரக் கற்பித்த வாராகவும் பண்டாரத்தும் . . . . கிற பால் அமுது செய்த வகைக்கெல்லாம் விட்ட . . . விழுக்காடு பத்திலொன்று விட்டு நடத்திவரக் கடவாராகவும் இப்படி

9. இந்தன்மத்துக்கு அகிதம் பண்ணினவன் கெங்கைக் கரையிலே காராம் பசுவையும் குருவையும் மாதா பிதாவையும் கொன்ன தோஷத்திலே போகக் கடவாராகவும் ॥உ *ஊாந வாூந ெ . . . ந͜ாெஆ*

10. *வாநாப* யொறு பாூநஃ ஸாஸநஃ . . . . ூநாஃ அதஃ வஃஃ *பாஹ*மஸ்து॥உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 27 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் கிழக்குச் சுவர் படியேத்த மண்டபம் தென்புறம்

குறிப்புரை : தொடக்கம் மற்றும் கல்வெட்டின் இடையிடையே சிதைந்தும் காணப்படுகின்ற இக்கல்வெட்டு நில தானம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கின்றது.

## கல்வெட்டு :

1. . . . . . . . . . . . . . .
2. . . . . வீரஜெ . . . . பக்க . . . .
3. ரில் வம்பூருடையான் அரையன் பொ . . . .
4. பாண்டிய வள நாட்டில் இயாதவராயனு . . . .
5. ய போதுகிற காவனேரியான் அருளுடை . . . .
6. லை குடியிருப்பான் மனையும் தனக்கு காராண்மை
7. பதினொன்றா நாள் . . . . எழுசிவ . . . . து கிணறும்
8. ன்னபடி இருந்து ந(ம்பெ)ண்டுகளும் கெ . . . .
9. ங்கவும் (கரு)ஞ் செய்யும் இராசராச விழுப்பரையன் . . . .
10. பெருமாள் நல்லூர் நான்கெல்லைக்குட்பட்ட . . .
11. நத்தமும் நத்தப்பாழும் நீர் நிலங்களும் மற்றும் எப்பேற்பட்டனவும் அச்சும்
12. ப் . . . . . அழகுடிதாங்கியால் நீர் நில . . .
13. ந்தன் . . . . . ராயமும் திரமும் முக்காலுமாக ந . . .

14. த்தத்துக்கு . . . . இப்படி தனக்கும் தன்வர்க்கத்தார்க்கும் காணியாக . . . . .
15. ம் செம்பிலும் வெட்டிக் கொள்க . . . . மந்திர ஓலை நாயகம் பூ . . . டையான் அனந்தனானார் ஆனந்த . . . .
16. த்து நடுவி . . . . ப் புல்லூர்க்கு குடிப் பொன் பற்றப் படை . . . .
17. காண்டு நாளொன்றுக்கு பதக்கு நானாழி அரசியும் இதுக்கு . . . . .
18. னகவும் கன்னா . . . அனுஷித்து நாழி அரிசியும் ஆக கீழ்கடை . . . . .
19. செயும் பேராளுமலை யெடுத்தானான குவலயத்தரயனும் நம் . . . . . .
20. தும் திருக்குருகூர் அமுதும் திருக்கோட்டியூர் அமுதும் திருமாலிருஞ் (சோலை)
21. பிரியனும் நமக்குச் சொன்னமையில் நான் நமக்கு கணக்கா . . . . .
22. . . . . . ஞ்சிரிய நத்தப்பிள்ளை ஸஊ/ரட்டின . . . . .
23. சொக்கன் அழகனான அனந்த நாராயணன் (எழுத்து)

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 28 |
| அரசன் | : – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் கிழக்குப்புறம்

குறிப்புரை : இடையிடையே சிதைந்து காணப்படுகின்ற இக்கல்வெட்டு, இவ்விறைவர்க்கும், இராமப்புலி அய்யங்கார் மகன் குமிழ இரங்கய்யங்கார் பிரதிஷ்டை பண்ணிய அழகர்க்குமாக அப்பன் திருப்பதி திருவேங்கடமுடையான் திருவாராதனைக் கட்டளைக்கு விடப்பட்ட தானங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. கல்வெட்டின் இறுதியில் கிரந்தச் சுலோகம் 'காப்பாக'க் கூறப்படுகின்றது.

## கல்வெட்டு :

1. ஸமஸ்த திரிபுவனச்சக்ரவத்தி . . . . . . . . மேல் செல்லா நின்ற விபவ ஸம்வத்சரத்து . . .
2. ணாம் . . . . . . . . அபரபக்ஷத்து ஸப்தமியும் குருவாரமும் உத்திரமும் ஸள . . . . .
3. ஐஸ்யோகமும் பவித்ரகரணமும் பெற்ற வி . . . . நாள் அழகர் தன் திருக்கனான் திருமாலிருஞ்சோலை நின்ற
4. மாவலி வாணாதிராயர் இராமப்புலி அய்யங்கார் மகன் குமிழ இரங்கய்யங்கார் ப்ரதிஷ்டை பண்ணின அழகர்
5. . . ன்னாமான தெற்கு வீடு அப்பன் திருப்பதி திருவேங்கடமுடையான் திருவாராதனைக் கட்டளைக்கு நம்
6. ஸ்தானம் திருமாலிருஞ்சோலை நின்ற(ருளிய) . . ஸந்தியில் ஸீரணோத்தாரணம் . . . . .

7. ணார் அழகர் திருவிடையாட்டமிடு . . . . . டை மடையும் குளங்களும் . . .
8. யிடப் பண்ணையிடப் பண்ணினான் தேவ மரவடை மாவடை . . . . . .
9. குளப்பாசி படுகை மற்றுமுண்டான சகலஸமுதாய வ்ருாவ்ழிகளும் . . . .
. .
10. உதகபூர்வமாகப் பண்ணிக் குடுத்தபடியாலே திருமாலிருஞ் சோலை நின்றருளிய திருமாலிருஞ்சோ
11. . . . . மாக சந்திராதித்தவரை நடத்திக் கொள்ளக் கற்பித்துக் கடவோமாகவும் இக்கிராம
12. நிலம் மற்றுமுள்ள ஆதாயத்துக்கு . . . . . . திருவேங்கடமுடையான்
13. திருவாராதனைக் கட்டளைக்குத் திருப்பதி ஸ்ரீ . . . . . அனிப்படியிலே இந்த தன்
14. மத்துக்கு அஹிதம் பண்ணின பேர் கங்கைக் கரையிலே காராம்பசுவையும் குருவையும்
15. மாதா பிதாவையும் கொன்ற தோஷத்திலே போவாராகவும் . . . . . .
நவாஒஹா
16. ஜஹாஉரண . . . . . . . ஊநத்து . . பதஒ நவெஹாதியாஒநஓ ஊதகஓ வரூஉஜ:

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 237/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 7 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1222 |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 29 |
| அரசன் | : | சுந்தரபாண்டியன் | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் கிழக்குப் பகுதி படியேத்த மண்டபம் தென்புறம்

குறிப்புரை : இவ்விறைவர்க்கு பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியனின் மனைவி 'திருவுடையாள்' என்பவர் எட்டு திருநொந்தா விளக்கு வைத்துள்ளார். அத்திருவிளக்குகள் முட்டாமல் எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்ட நிலதானம் 'விளக்குப் புறம்' என்ற பெயரில் தரப்பட்டதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. இவ்விளக்குப்புற நிலங்கள் அளநாட்டு இராச சூளாமணிச் சதுர்வேதிமங்கலம் என்ற ஊரில் இருந்ததைத் தெரிவிக்கின்றது. அந்நிலங்கள் 'பத்துமா' அளவினது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## கல்வெட்டு :

1. *ஸ்வஸ்திஸ்ரீ* திருவாய்க் கேள்விக்கு மேல் கோமாற பன்மரான *தி*ரிபுவனச் சக்கரவத்திகள் சோணாடு வழங்கியருளிய ஸ்ரீசுந்தர(பாண்டியதேவ)ற்கு யாண்டு ஏழாவது இந்நாயனார் அழ
2. கப் பெருமாள் தந்தருளின திருமுகப்படி அருளிச் செயல் திருமாலிருஞ் சோலைத் திருப்பதி ஸ்ரீவயிஷ்ணவர்களும் சிவதி . . . . . ாணிக்க . . . த்து . . . . திருமா
3. லிருஞ் சோலை நின்றருளின பரமஸ்வாமிகளுக்கு நம் பெண்டுகளில் திருவுடையாள் வைத்த திருநந்தாவிளக்கு எட்(டு)க்கும் (முன்)பு இறையிலி தேவதானமா
4. க அளநாட்டு இராச சூளாமணிச் சதுவெபுதி மங்கலத்து இவ்வாழ்வார்க்குத் திருவிளக்குப் புறமாக வந்த காராண்மை நிலம் . . . . . கடமையிறுக்கும் கோலா

5. ல் பத்துமா நிலம் ஏழாவது முதல் கடமை அந்தராயமும் தருவதான அச்சும் காரியவாராட்சியும் விநியோகமும் . . . . . டம் பஞ்சுபீலி சந்தி விக்கிரகப்பேறும்

6. மற்றெப்பேற்பட்டனவும் உட்பட திருவிளக்குப்புற இறையிலியாக இடப்பெற வேணுமென்று இவள் செ(சொன்னமை)யில் இவ்வாழ்வார்க்கு . . . யாண்டு

7. களில் திருவுடையாள் வைத்த திருநந்தா விளக்கு எட்டுக்கு திருவிளக்குப்புற இறையிலியாக இறுப்பதாக அளநாட்(டு இராச சூளா)மணிச் சதுர்வேதிமங்கலத்து .

8. .இவ்வாழ்வார்க்கு திருவிளக்குப்புறமாய் வந்த காராண்மை நிலம் உட்பட இவ்வூர் கடமையிறுக்கும் கோலால் பத ( . . . . . கட)மையந்தராயம் தருவதான அ

9. ச்சும் காரிய ஆராட்ச்சியும் விநியோகமும் வெட்டிப் பாட்டமும் பஞ்சு பீலி சந்திவிக்கிரகப் பேறும் மற்றுமெப்பேற்(பட்டன)வும் விளக்குப்புற இறையிலியாக

10. இட்டு நம் கேள்வியும் தரச் சொன்னோம் இவ்வாண்டு முதல் திருநந்தாவிளக்கு எட்டும் செல்லப் பண்ணி இப்படி(க்கிவை)கல்லிலுஞ் செம்பிலும் வெட்

11. டுவித்துக் கொள்க இவை மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்றுத் தச்சனூருடையான் தேவன் தனக்கும் மாணிக்க . . . . . ண்டு . . . . .

12. ப்பெருமணலூர் திருமாதர் திருமலையரையன் எழுத்து இவை . . . . . . ராஜனெழுத்து இவை கீழ் செம்பினாட்டு மால . . . . . ன்னேன் . . . . சுந்தரனான நாரா

13. யணன் எழுத்து . . . . . . . .

| த.நா.அ. தொல்லியல் துறை | | | தொடர் எண் : | 238/2003 |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : 7 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : சகம் 1523<br>கி.பி. 1601 |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு<br>ஆண்டு அறிக்கை | : – |
| மொழி | : | தமிழ் | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : | – | ஊர்க் கல்வெட்டு<br>எண் | : 30 |
| அரசன் | : | – | | |
| இடம் | : | | | |
| குறிப்புரை | : | அழகர் கோயில் ஆனி, ஆடி மாதத் திருவிழாக்களில் பணிசெய்யும் அய்யங்கார்களுக்கு வழற்கப்பட்ட தீர்த்த மரியாதைகள் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. | | |

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாத்தம் ௲௫௱௨௰௩ இதன் மேல் செல்லா நின்ற கர ஷு ஆடி மாதம் . . . . .
2. ண்டி மாதேவியார் பாரப்பத்தியிலே திருமாலை யாண்டார் திரும் . . . . . பட்டரில் . . . .
3. திருவாடித் திருநாள்த் தீத்தச் சங்க வா(ரி)யர் கையில் முனையதரயரிடத்தில் கொள்(கி) . . .
4. (திருவா)யு செ . . . . . . . . . . முத்தூற்றுக் கூற்றத்து . . செவ்
5. விருக்கைய் (நாட்டு) . . ண்னுடை . . . . முத்தியப்ப (செட்டியார்) . . . . . .
6. ன்னச் சொன்னபடிக்கு வயிந்தபடி . . . . கல்காரையும் கோவில் . . . . . .
7. ட்டு அழைக்கக் கேட்டு உமை வா(ரி)யன் இரண்டு பெருவிக் கணக் கணமும் தே
8. (வ)ர் வீரபாண்டிய . . . . . . . திருநாள் முதல் ஒன்பதாந் திருநாள் வரை தீர்த்த முண்டென்று சொல்லுகையில் பட்ட மையங்கார்

10. ஆனித் திருநாள் முதல் பதினாறாம் திருநாள் வரை தீர்த்த முண்டென்று சொல்லுகையில் தன்தான . . . .
11. . . கோவில்க் கணக்கப் பிள்ளை கையிலே களாசியம் தீத்தமும் போட்டு
12. ம் வைச்சுக் கொண்டு . . . . . .
13. . கோவில்க் கணக்கப் பிள்ளை . . . . .
14. முதல் ஒன்பதாந் திருநாள் வரை தீத்தமுண்டென்று சொல்லுகையில்
15. அந்தப்படிக்கு பட்டமை யங்காருக்கு மூன்று நாள் தீர்த்தங் கட்டளையிட்டு திருமாலைய
16. ாலே கட்டளையாகச் செய்து தீர்த்தமுங் கட்டளையிட்டமையால் . . . . . முதல் விகிறுதி ஞ பா
17. ணாகுத் தீத்தமும் (வெ)த்திலை கையில் . . . . . ஆனித் திருநாளில் . . . . .
18. பட்டையங்கார் (தீத்தம்) ஐஞ்சாம் வாரம் முதலாக நாம் . . . க் கை பண்ணி நம் காரிய . . . .
19. . . . . பெ(ரு)மாள் அய்யர் தப யரை விசாரிக்கச் சொல்லிக் கட்டளை யிட்டபடிக்கு அய்யர் கி . . . .
20. நயிந்த . . . . . உடையாரும் சங்கராய பிள்ளையும் திருவேங்கட மணலூர் . . . .
21. (அ)னைவருங் கூடியிருந்து . . . . . . கோயில் கணக்கப் பிள்ளையும் . . . .
22. வாருங்கேட்டு . . . கீழ் . . யம்பய . நா . . . வரையில் வகைப்படி . . . விவரங் கேட்டு பட்டறை
23. படியாவதற்கு தீத்தம் இல்லையென்று சொன்னமையில் பட்டரைய்யங்காார் திருமாலை யாண்(டார்) . .
24.. யப்ப பிள்ளை . . . . தீத்தம் . . . . யாண்டா . . . படி எல்லையிநின்று மூன்று
25. விளை . . . தீத்தமே அல்லாமல் தீத்தமில்லையென்று . . . . தோம் விட்டும் ஏமா . . . மென்று சொன்ன
26. மயில் . . . . டுமே அந்தப்படி தீத்தம் . . . . ப்போம் கூலத்தலத்தால் . . . . . த்தில் மே . . . . .
27. . . . பரங்கூட்டித் திருமாலை பண்ணிட (விலை ஓலை) கருஞ் செய் தோட்டம் . . . . .

28. . . . . னென்று இட்டபடி . . . . நின்று . . . ணப்பய்யங்கார் . .

29. . . . . . . .யங்கார்க்கு மூன்று மாலை . . . . . தரும் கொல்லை . . . . மல் . . . . . இல்லை யென்று சொன்ன

30. மையில் பட்டமையங்கார் பிழை . . . . . ன்ன மயில் . . . . (கிருஷ்)ண(மய)ங்கார் கொள்ளா நதி . . . .

31. . . . மைத் தந்த திருதா . . . . ரைக் . . . . ன்ன நாளைத் தீத்தமும் பிடித்துக் கொண்டு . . .

32. யோ . . . . இந்தப்படிக்கு . . . . தீத்தப்பிடிக்கு கால் . . . . டுத்தார் கொ

33. வில்க் கணக்கப் பிள்ளை . . . . (கை)யாண்டு போகைய்யெழுத்து முண்டு உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 31 - 45 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் வடபுறம் வெளிப்பக்கம்

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டுகளாகக் காணப்படுகின்ற இவை பெரும்பாலும் இவ்விறைவர்க்குக் கொடுக்கப்பட்ட நிலதானச் செய்திகளைத் தருகின்றன. ஒரு கல்வெட்டு, சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி வரிகள் சிலவற்றைக் கொண்டு விளங்குகின்றது.

## கல்வெட்டு :

31. 1. று மங்கல (இ)ராஜ வீதமும் திறப்புமான இவ்வூர்
2. விண்ணகராழ்வார் கோயிற்த் திருமதிளுக்கு ந . . . .
3. யரை நிலங்காலும் பதின் மூன்றாங் கண்ணாற்றுப்
4. மேற்கும் தென்னெல்லை காஞ்சிரம் பாழிக்குடியி . . .

32. 1. டுக்கொடு மளுரான மதுராயுத நல்லூர் அரையன் திரு நா . . . . டை . . .
2. ரானூர் கூற்றத்து சோழகுலாந்தகச் சதுர்வேதி மங்கலத்து
3. ண்ணகர் ஆழ்வார் திருவிடையாட்டம் கீரங்குடி யெல்லைக்கு
4. . . . . கீழ்கூற்றில் சி பராந்தகப் பிலா(ற்றுக்கு) கிழக்கு கீழ்க்கடை . . . . .

33A 1. ஆக நான்
2. றையிலி
3. க்கில் வா
4. நிலம் அ

B 1. மு உள்ளிட்ட நிலம் ஆக யிவ்வூர்களும் நில
2. வராயன் நமக்குச் சொன்னமையில் இத்
3. றுக்கு மேற்கும் தென்னெல்லை இவ்வா
4. டுப்பராகவும் பாண்டியன் கட்டளை கிழக்க

34. 1. கல் வாசலில் நிலத்து. . . .
2. மும் ஆக நான்கெல்லைக் குட் . . .
3. ான பதிரம(ம்) பாடகமுதல் இருபத்து . . . .
4. கு வடக்கும் மேலெல்லை பாண் . . . . .

35. 1. ந்த காணப் பெற வேணுமென்று . . . .
2. ச் சதுப்பேதிமங்கலத்திலே பதினைஞ் . . .
3. . . . . ப் பெருமாள் சந்திக்குத் திருப்படி மா . . . .

36. 1. ச்சகூவதிகள் கோனேரின்மை கொண்டான் திருமாலி
2. ன பரமஸ்வாமிகள் கோயிற் திருப்பதியாரில் விஸஜ . . . .
3. காலிங்கராயனான திருக்கோட்டியூர முதுக்கு இப்பரமஸ்வாமி . . . .
4. மண்டலத்து காஞ்சிபுரத்துச் சாந்தன் ஆளவந்தானான
5. க்கிறதி நஜவன மாய்க்காணி செய்கிற நஜவனம் செய் . . .
6. ன்மிகளுக்கு நம்பிமார்களில் அழகப் பெருமாள் . . .
7. ன் சஷியில் அமுது செய்த வ்யஸாஉத்திலே முந்நாழி அரிசி வ்யஸா

37. 1. வை மிழலைக் கூற்றத்துக் கீழ்க் கூற்று
2. ன்ன குருபராஜனெழுத்துᑊᑊஉ

38. 1. ழகப் பெருமான் திருப்பு . . . . .
2. செயல் கீழிரணிய முட்டத்துத் திருமா . . . .
3. னாட்டு ஆய்க்குடியான் ஸ்ரீ வல்லப . . .
4. டு முதல் கடமை யந்தராயமுந் தருவதா . . .
5. இந் நிவந்தங்களுக்கு ஆண்டொன்றுக்கு ஆ . . . .

39. 1. க்குப் பத . . . .
2. ழெல்லை காஞ்சிர . . .
3. ராக இந்நிலங்களு . . . .
4. . . . வரியுந் நம்மோலை . . .
5. . . . னான மாதவ(ராய)னெழுத்து -

40. 1. லிருஞ்சோலை நின்றருளி . . . .
    2. லிவறுக்கு திருவுடையானான . . .
    3. ரன் அச்சு முட்பட அச்சு நூற்றறுப . . . .
    4. . . . நூற்றறுபத்தேழுக்குச் செங்குடி . . . .

41. 1. யாக பாகனூர் கூற்றத்துச் சோழகு . . . .
    2. ழக்கும் வடவெல்லை ஐஞ்ஞூற்றுவன் . . .
    3. னூற்றுப் பத்தொன்பதாம் பாடக முதல் . . .
    4. ன பறப்பு நாட்டுக்குகுருகனூர்க்கும் இவ்வூர் பாம் . . . . .

42. 1. . . . . ற்றுக்கு மேற்கும் மேற்கு எ . . . .
    2. அரையே இருமாவரையும் வீரபாண்டி . . .
    3. ரை நிலங்களாலும் பதிநாலாங் கண்ணாற்று . . .
    4. பற்று செந்நேரி எல்லைக்கு கிழக்கும் வ . . . .

43. 1. நாட்டு ம்டக்குளக் . . .
    2. வானும் வேல . . . த்திரு . .
    3. பண் புல்லூர் . . . . .
    4. மான . . . . ரைத . . வ
    5. மாலி . . . . க்கு மிர . . .

44. 1. புயத்திருப்ப மாக்கலை மடந்தை வாக்கினில் வி . . .
    2. த்து வீற்றிருப்ப . . . . . ணகரி சூழ்ந்திரு . . . . .
    3. ரிய ஒருநேமியளவும் இரு நேமி ெ . . . .
    4. நின்றேத்த அன்ந மென் நடை அவ . . . .

45. 1. னூர் கூற்றத்து இராஜராஜ ந . . . . .
    2. பேர் பட்டனவும் உள்ப்பட . . .
    3. று முதலாக்கி இச்சுந்தரத் . . . .
    4. கொழ்க இவை மதுரை ‼உ

மாவட்டம் : மதுரை

வட்டம் : மேலூர்

ஊர் : அழகர் கோயில்

மொழி : தமிழ்

எழுத்து : தமிழ்

அரசு : பிற்பாண்டியர்

அரசன் : –

ஆட்சி ஆண்டு : –

வரலாற்று ஆண்டு : கி.பி. 13-ஆம் நூற்றாண்டு

இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை : –

முன் பதிப்பு : –

ஊர்க் கல்வெட்டு எண் : 46 - 51

இடம் : முதல் திருச்சுற்று சுவர் வடபகுதி வெளிப்பக்கம்

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டுகளாகக் காணப்படுகின்ற இக்கல்வெட்டுகளிலும் நிலதானச் செய்திகளே இடம்பெறுகின்றன. சில கல்வெட்டுகளில் நிலங்களின் பெயர்கள் உரிமையாளர்கள் பெயரிலும், அவர்கள் வசித்த ஊர்ப்பெயரிலும் அழைக்கப்படுகிறது. அழகப்பெருமாள் நிலம், கட்குடி கிழவன் நிலம், காஞ்சிரங்குடி நிலம் போன்றவை குறிப்பிடத்தக்கன.

## கல்வெட்டு :

46.. 1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்தி கோனேரின்மை கொ . . . . .

2. ண்டும் நிவந்தங்களுக்கு மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்று . . . .

3. . . .லயும் ஒற்றியும் கொண்டனுபவித்துப் போந்த நிலம் . . . .

4. இவர்கள் மனைகளும் அழகப் பெருமாளுடையாரில் அங் . . . .

47. 1. ண்ணியும் கட்குடி கிழவன் நிலம் அரையும் . . . காணியும் . . . . . . கழு . . . . மாவு . . .

2. லம் முக்காலே நாலு மாவரைக்காணி நீக்கி கீழ் எட்டுமா அரை . . . .

3. லம் தேவதானமாக இடப்பெற வேணுமென்று அண்ணன் பா . . . . .

4. ர் நிலம் முக்காலே நாலுமா அரைக்காலாக இடவென்றும் இவ்விலை . . . .

48. 1. . . கவரை நிலங்காலும் பதின்மூன்றாங்காணி . . .

2. . . லை காஞ்சிரம் பாழிக்குடி குடியிருப்புக்கு வடக்கும் மே . . . . .

3. ஜீவிதமுந் தவிர்த்து இவ்வாண்டு முதல் காராண்மை

4. . .பட சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலுஞ் செம் . . . . .

49. 1. டிய நல்லூரில் கால்போகி நிலம் காணியாக்கி கால்நிலம் அரைக்கா

2. (தெ)ாண்டை மானாரும் ஆழ்வார்க் கைக்கொண்டு போது கையாலே . .

3. (ந)மக்குச் சொன்னமையில் இப்பரமஸ்வாமிகளுக்கு திருப்படி மாற்று

4. மை தேவதான இறையிலியாக இடச் சொன்னோம் இப்படிக்கிவை . . .

50. 1. டி மாற்றுள்ளிட்டு வே . . . .

2. விருக்கை நாட்டு நாடக் . . .

51. 1. . . . . . டத் . . . மணியாக . . . .

2. . . . . (இ)றையிலியான குன்றத் . . . .

3. . . . . . . . னும் உள்ளிட்டார் விலை . . .

4. . . . . டுவனயும் இவ்வூர்ப் பூழி ஆதனா . . .

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | 22 |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 52, 52a |
| அரசன் | : கோனேரின்மை கொண்டான் சுந்தரபாண்டியன் | | | |
| இடம் | : | | | |

குறிப்புரை : மேலும் கீழுமாக இரண்டு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவ்வூர் இறைவர்க்கும், இவ்விறைவனை வழிபடுவோர்க்கும் ஆக விடப்பட்ட நிலதானம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கிறது. திருநாடுடையார் மடத்தில் ஸ்ரீதண்டி சன்யாசிகளுக்கும், ஏகாந்திகளுக்கும் உணவு மற்றும் சித்தாகாரம் இடவிடப்பட்ட நிலம் பற்றிய செய்திகளைத் தருகின்றது. இதே செய்தியினை மற்றொரு கல்வெட்டு (சுந்தரபாண்டியனின் கல்வெட்டு) குறிப்பிடுகின்றது. மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும் அக்கல்வெட்டு முற்றுப்பெறாமல் நிற்கிறது.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்ரவத்தி கோனேரின்மை கொண்டான் கீழிரணிய முட்டத்து திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமசுவாமிகள் கோயிலில் ஸ்ரீதண்டிஸந்நாஸிகளுக்கு ஏகாந்யிக . . . . .
2. யன் இப்பரமஸ்வாமிகள் கோயிலில் சேவித்த திருநாடுடையார் மடத்தில் ஸ்ரீதண்டிஸந்நாஸிகளுக்கு ஏகாந்திகளுக்கும் . . . த்திக்கிற் போக்கு ஊணுக்கும் சித்தாகாரம் உள்ளிட்டு வேண்டு வ(னவுக்கும்)
3. ஐனூற்றுவமங்கலத்தார் ஜீவிதமும் திறப்புமான இவ்வூர் தெற்கு வாசலில் நிலத்துக்குக் கீழெல்லை மழவராயன் ஏரிக்குத் தெற்கும் தென்னெல்லை இவ்வாற்றுக்கு வடக்கும் மேலெல்லை . . . . . . .
4. ஐனூற்றுவமங்கலத்து விளாகத்துக்கும் இவ்வூர் சுந்தரபாண்டிய விண்ணகர் ஆழ்வார் கோயில் திருமதிளுக்குத் தெற்கும் ஆக நாலு எல்லைக்குட்பட்ட நில(ம்) அரையே . . . . . . . . . ம் விரா . . . . ண்டு மட . . . . .

5. டாங்கண்ணாற்று பத்தொன்பதாம் பாடக முதல் இருபத்து மூன்றாம் பாடகம் வரை நிலங்களிலும் பதின்மூன்றாங் கண்ணாற்று பத்தொன்பதாம் பாடக முதல் இருபத்து மூன்றாம் பாடகம் வரை நிலங்களிலும் பதினாலாங் கண்ணாறும் பத்தொன்பதா . . . . .
6. நிலம் அரையே மூன்று மாவும் ஆகப் பாடகப்படி நிலம் ஒன்றேகாலே அரைமாவும் தென்பறப்பு நாட்டுக் குருகானூர்க்கும் இ . . . . லூற்றுக் குளத்துக்கும் கீழெல்லை காஞ்(சிரம் புரம் எ)ல்லைக்கும் மேற்கு தென்னெல்லை . . .
7. னேரி எல்லைக்குக் கிழக்கும் வடவெல்லை திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமசுவாமிகள் திருவிடையாட்டம் கீழத்திறல் கோனெல்லைக்குத் தெற்கும் ஆக நான்கெல்லைக்குள்பட்ட குளமும் குளப்பரப்பும் நத்தமும் உள்ளிட்டு . . . . . . .
8. ஹூமியும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப்பேறும் மாக்கலமுந் தடிப்பதாந பாடி காவலும் மற்றுமெப்பேற்பட்டனவும் . . . .
9. மயில் இத்திரு நாடுடையார் மடத்தில் ஸ்ரீ உண்டிஜஙநாசிகளுக்கும் ஏகாந்திகளுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களும் வத்திக்கிற பேர்க்கும் ஊணுக்கும் சித்தாகாரமுள்ளிட்டு வேண்டுவனவுக்கும் பாகனூர்க் கூற்றத்து சோழகுலாந்தகச் சதுர்வேதி மங்கலத்து ஐந்நாற்றுவ மடையநிர்த்த நிலமாவதாக நம் கேழ்வி ராச ெ . . .
10. ர்த் தெற்கில் வாசலில் நிலத்துக்கு கீழெல்லை மழவராயப் பேராற்றுக்கு மேற்கும் தென்னெல்லை இவ்வாற்றுக்கு வடக்கு மேலெல்லை இரண்டாஞ்சேரி ஞாய பரிபால விண்ணகராழ்வார் திருவிடையாட்டம் கருங்குடி எல்லைக்குக் கிழக்கும் வடவெல்லை ஐநூறுடையானான உத்தம பாண்டிய விழுப்பரையன் . . .
11. டிய விண்ணகர் ஆழ்வார் கோயில் திருமதிளுக்குத் தெற்கும் ஆக இநான்கெல்லைக் குட்பட்ட நிலம் அரையே இருமாவரையும் வீரர் பாணர் ஜீவிதமுற்றூட்டும் பராக்கிரம பாண்டியன் கட்டளைக் கீழ்ப்பற்றில் கிடந்த கீழ் பிலாற்றுக்கு கிழக்கு ஸ்ரீகரணவதிக்குத் தெற்கு . . . .
12. தாம் பாடகமுதல் இருபத்து மூன்றாம் பாடகம் வரை நிலம் காலும் பதின்மூன்றாங்கண்ணாற்று பத்தொன்பதாம் பாடகமுதல் இருபத்து மூன்றாம் பாடகம் வரை நிலங் காலும் பதினாலாம் கண்ணாற்று பத்தொன்பதாம் பாடகமுதல் இருபத்து மூன்றாம் பாடகம் வரை நிலம் . . . . . .
13. மூன்று மாவும் ஆக பாடகப்படி நிலம் ஒன்றே காலே அரை மாவும் தென்பரப்பு நாட்டு கருகனூர்க்கும் இவ்வூர்ப் பாலாற்றுக் குளத்துக்கும் கீழெல்லை காஞ்சிரம் பாழிக்குடி . . . . . பத்து திறப்புக்கும் மே(ற்கு)

14. சேந்தனேரி எல்லைக்குக் கிழக்கும் வடவெல்லை திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமஸ்வாமிகள் திருவிடையாட்டம் கீழ்திறல் தென்னெல்லைக்குத் தெற்கும் ஆக நான்கெல்லைக்குள்பட்ட குளமும் குளப்பரப்பும் நத்தமுள்ளிட்ட நிலமும் ஆக இவ்வூர்களும் நிலங்களும் . . . .

15. பெரும் ஜீவிதமும் தவித்து இவ்வாண்டு முதல் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப் பாட்டமும் பஞ்சுபீலியும் சந்திவிக்கிரகப்பேறும் மாகலமும் தடிபதக்கும் பாடிகாவலும் மற்றும் எப்பேற்பட்டனவும் உட்பட மடப்புற இறையிலி ஆகவும் வரி-

16. யிலாரெழுத்திட்ட உள்வரியும் நம்கேழ்வியும் தரச்சொன்னோம் இகைக்கொண்டு இப்பயிர் பார்த்து சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டுவித்துக் கொள்க இவை வடதலைச் செம்பினாட்டு நல்லூர் ஆசி உலகமுண்டான் தேவனான செம்பியதரையன் எழுத்து யாண்டு (உாஉ) நாள் உ௱எஉ இவை நெற்சுர நாட்டு . . . . . . .

17. னா சந்தி ஆன தாண்டவிச்சாதிர நல்லூர் நம்பி உடையான் நாயகனான கொங்கராயன் எழுத்து இவை கருங்குடி நாட்டுக் கீழ் நெட்டூரான காத்திலிசுலைய நல்லூர் கோட்டூருடையான் தொண்டைமான் எழுத்து .

17a . . . . திருவும் பொருசெய மடந்தையும் . . . க்கு தவிற முலைச் செயப் புயத்திருப்ப வேத நாவில் வெள்ளிதட்டா மரைத்தக்கத்

18. லமாது கவின் பெற திளைப்ப எண்டிரை உடுத்த மண்டினிக் கிடக்கைத்திரு நிலமடந்தை உரிமையிற் கிளப்பச் சமயநீதியும் தருமமும் தழைப்ப இமையவர் விழாக்கொடி இடந்தொறு மெடுப்ப கருங்கலி செழித்து வேதியரும் தொழில் விழ செங்கோல் வளங்கிலவ பொருதிறலாழி பூதலஞ் சூழ்வர ஒருகை . . . . தேஹமும் மத்த . . . .

19. ற்க் கோட்டு ஐவத முதல் செய்தீற் கொற்றத் தெண்டிரை யானை எருத்தமேறிக் கண்ட நாடெமெதெனக் கயல்களிகூரப் போசலந்துளுவங்குச் சனங்குச்சரம் கோசலகம் பொப்பளம் பூண்டரங்கலிங்க மீழங்கடாரம் கடவுட் தெலிங்கம் சோனகம் சீன முதலாட விதிமுறை திகழ் வேறு வேறு வகுத்த முதுகிலார் கிழமையும் முடி புனைவேந்தரும் இருதிறை நா

20. யகனென்று கைத்தக திருமுடி சூடி செங்கோலோச்சி கொற்றத்தானக் குளிர் குடை நிழல் கற்றைக் கவரி காவலர் வீச மிகைதிரு நவமணி வீரபலியாகத்துடன் முடிசூடிட யாகுலத் திருவெனப் பங்கயமலர்க் கரங்குவித்து பாத்திவர் மங்கையர் திரண்டு வணங்கும் சென்னியில் சுடரொளி மௌலி சுடர்மணி மேலிட இணை மலர் சீரடிக் கமங் தரங்க பல் . . . .

21. ணுக்குழக(ன்)முழுதுடையாள் ஒடும் வீற்றிருந்தருளிய கோமாற பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு நாளிருநூற்றொன்றினால் மதுரைய் யோதிய வளநாட்டு மாடக் குளக்கிழ் மதுரைக் கோயில் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப்பீடம் மழவராயனில் எழுந்தருளியிருந்து கீழிரணிய முட்டத்து திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரம

22. ஸ்வாமிகள் கோயில் ஸ்ரீதண்டிஸந்நாசிகளுக்கும் ஏகாந்திகளுக்கும் செய்யத் திருவாய் மொழிந்தருளினபடி வடதலைச் செம்பி நாட்டு கீழைக் கொடுமளூரான மதுரோதய நல்லூர் அரையன் திருநாடுடையானான நீலகங்கரையன் இப்பரமசுவாமிகள் கோயில் செய்வித்த திருநாடுடையான் மடத்தில் வத்திக்கிற சன்யாசிகளுக்கும் ஏகாந்திகளுக்கும் ஊணுக்கும் சித்தாகாரத்தும்

23. . . . . . . . . .

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 13+13 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 53 |
| அரசன் | : | கோனேரின்மை கொண்டான் | | | |
| இடம் | : | முதல் திருச்சுற்று வெளிப்புறம் வடக்குப் பகுதி | | | |

குறிப்புரை : அடுத்தடுத்து இரு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மேலுங் கீழுமாய் உள்ள இக்கல்வெட்டுகளில் கீழுள்ள கல்வெட்டு முற்றுப்பெறவில்லை. இக்கோயில் சிரிகாரியஞ் செய்பவர்கள் மற்றும் வைஷ்ணவர்களுக்கும். கொடுக்கப்பட்ட நிலதானம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கின்றது. அவ்வாறு கொடுக்கப்பட்ட நிலத்திற்கான எல்லை வரம்பும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தேவதான நிலங்கள் அடங்கிய ஊர் 'சேர நாராயணபுரி' எனப் புதுப்பெயரிடப்பட்டதையும் தெரிவிக்கின்றது. இதே செய்தியினை கீழுள்ள கல்வெட்டும் தெரிவிக்கலாம்.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் திருமாலிருஞ் சோலை நின்றருளிய பரமசுவாமிகள் கோயில் ஸ்ரீகாரியஞ்செய்வானுக்கும் திருப்பதி சிரி வயிஷ்ணவற்கும் இவ்வாழ்வார் தேவதானம் வடபறப்பு நாட்டு மூன்று நாட்டாருங் கிழாரும் புளிவயலும் பிறகங் குளமு
2. ம் நாட்டார் குளமுங் கிடதிறலும் புதுக்குளமும் பட்டன் குளமும் அரிவிகு(ள)மாக காடுஞ் சோலை ஏரியுந் நெற்குன்றமுந் தேவிமங்கலமு மறமடக்கியுங் காஞ்சிரப் பாழியும் அண்ணல் வாயிலும் கருங்குழியும் ஆனைமலை நாடாழ்வான் குளமும் நாச்சி நல்லூரும் கண்டுகொண்ட மா
3. ணிக்கமும் கடம்பன் குளமும் அவையம்புக்கான் ஏரியும் தேசிக்குடிக்காடு உட்பட்ட குளங்களும் . . . காலம் வனபிற்றாய்க் கிடந்தமையால் இக்குளங்கள் நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும் கருஞ்செய் புன்செயும் நத்தமும் கருங்குளமும் குளப்பரிப்பும் பதின்மூன்றாவதின் எதிர் பதின்மூன்றாமாண்டு முதல் மு

4. ன்னுடையாறும் பழம் பேறும் தவிர்த்து சேர நாராயணபுரி என்னும் பெயரால் நகற் செய்த ஒரூர் ஒரு புரவாக்கி முப்பது மனையும் நிலமு(ம்) எழுதி இவ்வாழ்வார் இந்நாட்டு தேவதான ஊர்கள் கடமை அ

5. ந்தராயம் இறுத்து வரும்படியே இறுத்து அனுபவித்துக்கொள்ள வேணுமென்று இசுனான அழகப் பெருமாள் சொன்னமையில் இவ்வாண்டு முதல் இப்படிச் செய்வதாகக் குடிஓலை செய்வதாகக் குடுக்கச் செ

6. ான்னோம் இப்படிச் சந்திராதித்தவற் செல்வதாக கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்ளப் பண்ணி இந்நாட்டுத் தேவதானமான ஊர்கள் இவ்வாழ்வார்க்கு இறுத்து வரும்படியே கடமை அந்தராய

7. ங் கொண்டு திருப்படி மாற்றுக்கு வேண்டும் நிவந்தங்கள் செல்லக் கடவதாக இவை செம்பியதரையன் எழுத்து யாண்டு (ஆறா)வது நாள் உ௰அ இவை வெண்ணாடுடையான் எழுத்து இவை பல்லவராயன் எழுத்து

8. *ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீஹசத* . . . றிவனோதி *ஸ்தாநஸம்ஸ்தகாரணம்* ஐ . . . . இதுர் *வைவாஷி நக்ஷிமாஸநம்ஹரே*உ வடபறப்பு நாட்டு சேர நாராயணபுரத்து நகரத்தாற்கு இந்நகரப் பற்று மூன்று நாட்டானுங் கிழா

9. ரும் புளிவயலுமிவ் கருங்குளமும் நாட்டார்குளமுங் கடதிறலும் இது . . . . பட்டன் குளமும் அருவி குடிகாடுஞ் சோலை ஏரியுந் நெற்குன்றமுந் தேவிமங்கலமும் மறமடக்கியுங் காஞ்சிரம்பாழியும் அண்ணவாயிலும் புதாங்குழி

10. யும் ஆனை மலை நாடாழ்வான் குளமும் நாச்சி நல்லூருங் கண்டு கொ(ண்டான்) மாணிக்கமுங் கடம்பன் குளமும் அவையம்புக்கானேரியும் தேசிகுடிகாடும் உட்படு குளங்களும் நான்கெல்லைக்குட்பட்ட நீர்நிலங்களும் கருஞ்

11. (செயும்) . . . . . . . . . . . ஸ்ரீ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 257/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 2 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 54 |
| அரசன் | : | குலசேகரன் | | | |
| இடம் | : | முதல் திருச்சுற்று மதிள் வடபுறம் வெளிப்பக்கம் | | | |

குறிப்புரை : இக்கோயில் இறைவர்க்கு இராமன் கண்ணபிரானான கலிகடிந்த பாண்டிய தேவர் கொடுத்த தானம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கின்றது. இவர் திருநந்தவனம் ஒன்று நிறுவி அதிலிருந்து கிடைக்கும் மலர்களைக் கொண்டு தினம் நூறு மாலைகளும், ஒரு தோள் மாலையும் தயார் செய்து இறைவனுக்குச் சாத்தவேண்டும் என வென்று கிழி கொண்டதாதர் என்பவரிடம் ஒப்படைத்தார். இச்செயல்பாடு தவறாது நடந்துவரும் பொருட்டு நூறு காசுகளையும் வைப்புத் தொகையாக வைத்துள்ளார். தாதரும் அவரின் வர்க்கத்தாரும் இச்செயல் செய்யப் பணித்துள்ளார்.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ எதநு ஸஹாஉராயமுவ . . . . . விஹூஷணஉ ஸ்ரீஉநு ஸ்ரீகுமயாஉ மஹூத்ூ வற மாஸநஓ : இடு இராமன் கண்ணபிரானான கலிகடிந்த பாண்டிய தேவர் தாம் அழகர்கு திருமாலிருஞ்சோலைத் திருப்பதி சகாத்தம் பிமாரலத்தடி . . . . வர் திருமலை
2. ஆழ்வானான வென்று கிழி கொண்ட(தா)தரைக் கொண்டு தலை மருவிய . . திருநந்தவனம் சுந்தரத் தோளியான் திருநன்தவனத்தில் தெற்கடைய நிலம் அரைக் காணியும் தமக்கு நன்றாகத் திருநன்தவனஞ் செய்து திரு . . . . . . . ழாம் முதலா
3. யுள்ள நூறு திருப்பள்ளித் தாமமும் வைத்து ஆ . . . . . . நாளா சிறுத் திருமாலையும் எடுத்து சாத்தி யருளிட்டவைகளுக்கும் திருனாள் திருவநூ யனங்களுக்கும் அழகர் திருவடி நிலை கொத்துப்புறம் பு எழுந்தருளினால் திருமுன்பு திருமாலையும் திருத்தோள் மாலையும் எடுத்துச்

4. சாத்தியருளி பண்ணவும் இப்படி செய்கைக்கு இவ் வென்று கிழி கொண்டான் தாதற்குச் சீவனத்துக்கும் *வ்ருஷ்டி*யிலே நாள் ஒன்றுக்கு ஒரு *வ்ருஷாழம்* குடுப்பதாக ஸ்ரீ பண்டாரத்தில் பொலியூட்டாக ஸ்ரீ குலசேகரதேவர்க்கு யாண்டு இரண்டாவது (நாள்) . . . . . . மற்றுமது . . . . னான சந்தி

5. யில் அமர பக்ஷத்து *சதுர்த்தசி*யும் நாயற்றுக்கிழமையும் பெற்ற வி*சா*கத்து நாள் ஒடுக்கின அச்சு(ரு) இம் மூன்றும் அழிவின்றியே இவனும் இவன் வற்கத்தாரும் இதற்கு நன்றாக இப்படியிலே முட்டாமல் செய்து சந்திரா*தி*த்தவற் பெற்று வருவதானமைக்கு இப்படிக் கல்லிலும் வெட்டிக் கொள்க

6. இவை பணியால் திருமங்கைத் தாதன் எழுத்துஉ இப்படிக் கல்வெட்டினேன் இக்கோயில் சிற்பாசாரியன் பா(சூவன்) தங்கோயிலாசாரியன் எழுத்துஉ இப்படி ஸ்ரீ வைஷ்ணவர் *ரக்ஷை*உ

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 258/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 13 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1203 |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 55 |
| அரசன் | : | குலசேகரன் | | | |

இடம் : முதல் திருச்சுற்றுச் சுவர் வடபக்கம் வெளிப்பகுதி

குறிப்புரை : 'பூவின் கிழத்தி' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியினனான சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டாகும். இவ்வூர் இறைவர்க்கு திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு விடப்பட்ட நிலதானம் பற்றிய செய்தியினைத் தருகின்றது. இத்தானம் பதின்மூன்றாம் ஆண்டு தொடங்கி தொடர்ந்து நடந்தது என்பதை எதிராமாண்டு, எதிராமாண்டின் எதிராமாண்டு எனக் குறித்து கல்வெட்டப்பட்டுள்ளது. இத்தேவதான நிலங்கள் அடங்கிய ஊர்க்கு திருமலையுடையான் விளாகம் என்று பெயரிடப்பட்டதையும் அறியமுடிகின்றது.

## கல்வெட்டு :

1. ||உ *ஸ்வஸ்திஸ்ரீ* (பூவின் கிழ)த்தி மேவி வீற்றிருப்ப மேதினி மாது நீதியிற் புணர வயப்போர் மடந்தை ஜயம்புயத்திருப்ப மாக்கலை மட(ந்தை வா)க்கினுள் விளங்கத் திசையிரு நான்குமிசைநிலா வெறிப்ப மறைநெறி வளர மனுநெறி திகழ அறநெறிச் சமயங்களாறும் தழைப்பக் காணில் வேங்

2. கை வில்லுடன்(தொடர்ந்துற) மீனம் கனகாசலத்து வீற்றிருப்ப எண்கிரி சூழ்ந்த வெழுகடலேழும் வெண்குடை நிழற்றச் செங்கோல் நடப்பக் (கொடுங்)கலி நடுங்கி நெடும் பிலத் தொளிப்ப வில்லவர் செம்பியர் விராடர் மராடர் பல்லவர் திறையுடன் முறை முறை பணிய இருநேமியளவு மொருநேமியோங்க வின்ன

3. முதாகிய இயலிசை நாடகம் மன்னிவளர மணிமுடி சூடி வீரஸிம்ஹாஸனத்து வீற்றிருந்தருளிய ஸ்ரீகோச்சடையபன்மரான *திரிபுவனச்* சக்கிரவத்திகள்

ஸ்ரீகு(லசேகரதேவ)ர்க்கு யாண்டு ௰௩ வது நாள் தொள்ளாயிரத்து இரண்டினால் மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக் கோயிற்ப் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப் பீடம் மழவராய

4. னிலெழுந்தருளியிருந்து கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகள் கோயில் ஸ்ரீகாரியம் செய்வானும் ஸ்ரீவைஷ்ணவரும் செ(ய்யத்) திருவாய் மொழிந்தருளினபடி திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமஸ்வாமிகளுக்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு அண்டநாட்டுப் பெருமண

5. லூர் மந்திரி ஆதித்த தேவனான பல்லவராயர் செயங்கொண்ட சோழன் சீவல்லவ(தேவன்) நாடாழ்வார் பக்கல் கீரனூர் நாட்டுப் பண்ணாட்டான் கோட்டைக்காடு வெட்டில் விலைகொண்ட நிலங்கள் . . . (நம்)மோலைப்படிக்கு மேற்சொன்ன கோட்டூரான

6. அழகிய பாண்டியநல்லூர் மேலெல்லைக்கு மேற்கு தென்னெல்லை . . . . . யாற்றுக்கு வடக்கும் மேலெல்லை அழகிய பாண்டிய (நல்லூர்) மணிக்கண்மீச்சுரமுடையார் தேவ . . . . (செம்)பியதரையன் காணிப்பற்று பஞ்சா விளாகத்துக்கு கிழக்கும் வடவெல்லை அழகிய பாண்டிய நல்லூர்க்கும் நில

7. த்து நீர்பாய்கிற காலுக்குங் குளங்களுக்குந் தெற்கும் ஆக இந்நான்கெல்லைக் குட்பட்ட நீர்நிலம் புஞ்செய்யும் இடைக்காட்டூரான . . . . . . நல்லூர் மேல் வயலில் இக்காணிப்(பற்று) . . . . த்தூர்க்குக் கீழெல்லை . . . . . . . யக்கலம் . . . . . . சையும் இச்சங்கவி வயக்கற்கீழ் வரம்பை தெற்கெல்லை . . .

8. நோக்கிக் போகிற வாய்க்காலுக்கும் சிறுகுடிப் பழங்குளவாயிலே விழுந்த வாய்க்காலுக்கும் இவ்வாய்க்காலில் நின்றும் வைகையான சிவல்லபப் பேராற்றிலே யுற்ற செவ்வைக்கும் மேற்கும் . . . . . இவ்வாற்றுக்கும் . . . . . . மேற்படியான் விலைகொண்ட காடுவெட்டி நிலத்துக்கு கிழக்கும்

9. வடவெல்லை அழகியபாண்டிய நல்லூர்க் குளங்கரைக்குத் தெற்கும் ஆக இந்நான்கெல்லைக்குட்பட்ட நீர்நிலமும் புஞ்சையும் ஆக இந்நிலங்களூரிற் பிறித்து வேறுமுதலாய் திருமலையுடை (யான் விள)ாகமென்னும் பே(ரால் ஒரு) புரவாக்கி அழகிய பாண்டியன் கோலால் நிலமளந்து பயிறேறி விளைஞ்ச நிலத்

10. துக்கும் மாத்தாற்காசு காலுமாக வீரபாண்டியனால் நெல்லு நாற்கலமும் யிறுப்பதாக விறை கட்டி மந்திரி ஆதித்த தேவனான பல்லவராயற்கும் இவர் வற்கத்தாற்கும் காணியாய் வந்த . . . . . (வி)நியோகமும் மா . . . . . . வெட்டிப்பாட்டமு மற்றும் எப்பேர்ப்பட்டனவுமுட்படப் பதின்மூன்றாவதின் எதிராமா

11. ண்டினெதிரா மாண்டு முதல் தேவதான இறையிலியாயிருப்பதாக யிடப்பெற வேணுமென்று மழவராயர் நமக்குச் சொன்னமையில் திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமஸ்வாமிகளுக்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிமந்தங்களுக்கு அண்டநாட்டுப் பெருமணலூர் மந்திரி ஆதித்த தேவ

12. னானப் பல்லவராயர் செயங்கொண்டசோழன் சீவல்லப தேவன் நாடாழ்வான் பக்கல் கீரனூர் நாட்டுப் பன்னாட்டான் கோட்டைக் காடுவெட்டியில் விலைகொண்ட நிலத்துக்கு விலையோலைப்படி நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும் புன்செய்யும் இடைக்காட்டூரான அழகிய பாண்டியநல்லூர் மேல்

13. வயலில் இவர் காணிப்பற்றான நிலத்துக்கு நான்கெல்லைக் குட்பட்ட நீறநிலமும் புன்செய்யும் ஆக இன் நிலங்கள் ஊரிற் பிறித்து வேறுமுதலாய் திருமலையுடையான் விளாகமென்னும் பெயரால் ஒரு புரவாக்கி வீரபாண்டியன் கோலால் நிலமளந்து பயிறேறி விளைந்த நிலத்துக்கும் மாத்தாற் காலும் முதல் வீர

14. பாண்டியனால் நெல்லு நாற்கலமுமிறுப்பதாக இவை நாட்டியத்தான் ஆதித்த தேவனான பல்லவராயர்க்கும் இவர் வற்கத்தார்க்கும் காணியாயந்தராயமும் வினியோகமும் மாக்கலமும் வெட்டிப்பாட்டமும் மற்றும் எப்பேற்பட்டனவுமுட்படப் பதின்மூன்றாவதினெதிராமாண்டி னெதிரா மாண்டு முதல் தேவதான இறையிலியா

15. யிறுப்பதாக விட்டு வரியிலாருழ் வரியும் நம்மோலையும் தரச்சொன்னோம் இப்படிக்கொண்டு திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்கள் செல்லப் பண்ணுகவென்றும் சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டிவித்துக் கொள்கவென்று திருவாய் மொழிந்தருளினார் இவை புறப்பு

16. வளநாட்டு புத்தூர் உடையான் பொன்னன் சிரியஷெவன் செய்திரப் பல்லவரையனெழுத்து॥உ திருவாய்க்கேழ்விக்கு மேல் ஸ்ரீ கோச்சடை பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலசேகரஷெவற்கு யாண்டு பதின்மூன்றாவதினெதிராமா ண்டினெதிராமாண்டு வட . . .ளவழி நாட்டு அளகையான் கரி

(கல்வெட்டு முற்றுப் பெறவில்லை)

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | 13+1+1 |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 56, 56A |
| அரசன் | : – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் வடபுறம் வெளிப்பக்கம்

குறிப்புரை : தொடக்கமும் முடிவுமில்லாத துண்டுக் கல்வெட்டு ஒன்றும், தொடக்கமில்லாத பாண்டியன் குலசேகரனின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றுமாக இரு கல்வெட்டுகள் இடம்பெறுகின்றன. இவ்விரண்டுமே இவ்வூர் இறைவர்க்குத் தானமாய்க் கொடுக்கப்பட்ட நிலத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. முன் சொன்ன கல்வெட்டினைப் போன்றே இதுவும் அமைந்துள்ளது.

## கல்வெட்டு :

56. 1. ருக்கத் திருப்படி மாற்றுள்ளிட்டு வே(ண்) . . . . .
2. னுரானழகிய பாண்டிய நல்லூரில் . . . .
3. நிலம் மூன்று மாக்காணியும் னாக்காணியும் . . . .
4. ர முந்தி(ரி)கைக் கீழ(ரை)யே மூன்று மாமுக் . . . . .
5. கீழரையுட்பட்டனவு . . . . . விட்ட . . . . .
6. ளத்து நால் . . . . . காராண் . . . . .

56.A 1. ச் செயங்கொண்ட சோ . . . . . . . டனான களவ . . . . . . ரனேன் அண்ட நாட்டுப் பெருமணலூர் மந்திரி ஆதித்த தேவனானப் பல்லவரயற்கு நான் விற்றுக் குடுத்த நிலமாவது . . . . . . . . . கோட்டையா . . . இவர்க்கு விற்றுக் குடுத்த நிலத்துக்குச் சூழெல்லைக்கு கீழெல்லை இடை
2. க்காட்டூரான அழகிய (பாண்டிய)நல்லூர் மேல் வயலு . . . . . தென்னெல்லை வைகையான சிவல்லவப் பேராற்றுக்கு வடக்கும் மேலெல்லை இடைக்காட்டூருடைய மணிகண்டீச்சுரமுடைய (நாயனார்) கோயிற் திருப்பள்ளியறை நாச்சியார்க்குத் தேவதானமாய் செம்பியதரையர் காணிப்பற்றான விராபனார் விளாகத்

3. துக்குக் கிழக்கும் வடவெல்லை இடைக்காட்டுற்குள் இவ்விசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்ட நீர்நிலமும் புன்செயும் தோட்டமும் ஆறிடு படுகையும் மற்றுமெப்பேற்பட்டனவுமிவற்கு விற்று விலைப்பிரமானம் பண்ணிக் குடுத்தேன் பல்லவராயற்கு . . . . ளவும் நா

4. டாழ்வானேன் இப்படி விற்றுக்குடுத்த நிலத்துக்கு இ . . . . . . யோலையும் பொருட் சில வோலையும் தறுவதாகவும் இதுவல்லது வேறு விலையோலையும் காட்டவும் காணவும் கடவதல்லவாகவும் எம்மிலிசைந்த விலைப் பொரு ெ(ளல்)லாம் விலையாவதுக் களித்த பொருளறக் கொண்டு

5. விற்றி . . . . லகலஞ் செய்து குடுத்தேன் பல்லவராய . . . . . . ழி நாடாழ்வானேன் இப்படி விற்றுக் குடுத்த நிலத்துக்கு கடமையும் அந்தராயமும் வினியோகமும் மாக்கலமு வெட்டிப்பாட்டமும் மற்றும் எப்பேற்பட்டனவுமுட்படக் கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிக்கு (தேவதான)

6. இறையிலி இறுப்பதாகத் (தந்தோம்) இப்படி சம்மதித்து விலைப் பிரமாணம் பண்ணிக் குடுத்தேன் மந்திரி ஆதித்த தேவரான பல்லவராயற்கு செயங்கொண்ட சோழன் சிவ(ல்வவன்) . . ழ நாட்டு . . . . னேன் இப்படிக்கு இரா . . . . ||உ இப்படிக்கு இவை . . . . ருமுகப்பெருமாள் எழுத்து . . . . .

7. நல்லூர் ஊர்க்கணக்கு கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமசுவாமிக்கு திருவிடையாட்ட இறையிலியாக இறுப்பதாக தங்களூர் கடமை இறுக்குங் கோலால் (நிலமளந்து) மா நிலம் கடமையு மந்தராயமும் வினியோகமு . . . . . . .

8. பட்டனவு முட்பட யாண்டு பதின்மூன்றாவதினெதிராமாண்டி னெதிராமாண்டு முதல் இறையிலியாக இறுப்பதாக நீர் வார்த்துக் குடுத்தேன் இப்படிக்கு ஸ்ரீவைஷ்ணர்(க்கு) இறுத்து சந்திராதித்தவற் செல்வதாகவும் உ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 13 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1203 |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 57, 57A |
| அரசன் | : | குலசேகர தேவர் | | | |
| இடம் | : | முதல் திருச்சுற்று வெளிப்பக்கம் வடபுறச் சுவர் | | | |

குறிப்புரை : பூவின் கிழத்தி எனத் தொடங்கும் மெய்க்கீர்த்திக்கு உரியவனான குலசேகரனின் கல்வெட்டாகும். இவ்விறைவர்க்கும், இக்கோயில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும், நம்பு செய்வானுக்கும் நிலத்தானம் கொடுக்கப்பட்டது. இவ்விறைவர்க்கு ஆடித்திருநாள், ஐப்பசித் திருநாள், மார்கழித் திருநாள் சிறப்புற நடத்துவதற்கு மடப்புற இறையிலியாக நிலம் தானமாக வழங்கப்பட்டது. மேலும் இவ்விறைவனுக்கு திருப்பள்ளித் தொங்கல்புறமாக இரண்டு வேலி நிலம் தானமாக வழங்கப்பட்டதையும் தெரிவிக்கின்றது.

## கல்வெட்டு :

1. *ஸ்வஸ்திஸ்ரீ* பூவின் கிழத்தி மேவி வீற்றிருப்ப மேதினி மாது நீதியிற் புணர வயப்போர் மடந்தை ஜயமடந்தை புயத்திருப்ப மாக்கலை மடந்தை வாக்கினுள் விளங்கத் (திசை)யிரு நான்கும் மிசை நிலா வெறிப்ப அறநெறி வளர மனுநெறி திகழ அறநெறிச் சமயங்களாறும் தழைப்பக் காணில் (வேங்கை வில்லுடன்) தொடர்ந்துற மீனம் கனகாசலத்து வீற்றிருப்ப எண்கிரி சூழ்ந்த வெழுகடல் எழுபொழில் வெண்குடை மேற்செங்கோ
2. ல் நடப்ப கொடுங்கலி நடுங்கி நெடும் பிலத் தொளிப்ப வில்லவர் செம்பியர் விராடர் மராடர் பல்லவர் திறையுடன் முறை முறை பணிய இருநேமி அளவு மொருநேமி(யோ)ங்க யின்னமுதாகிய வியலிசை நாடகம் பன்னிவளர மணிமுடி சூடி வெற்பன் வோங்கிய வீரஸிංஹாஸனத்துக் கற்பக (நிழற்)கீழ் கலைவல்லோர் புகழ் மன்னவர் தேவியர் வணங்கி நின்றேத்தும் அன்னமென்னடை அவனிமுழுதுடையாளொடும் வீற்றி

3. ருந்தருளிய ஸ்ரீகோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலசேகரதேவற்கு யாண்டு ௰௩ வது (நா)ள் நாலாயிரத்து எழுநூற் . . . . . தினால் மதுரையுதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக் கோயில் பள்ளியறைக் கூடத்துப் பள்ளிப் பீடம் மழவராயனில் எழுந்தருளியிருந்து கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகள் கோயில் திருப்பதி ஸ்ரீவைஷ்ணவர்க்கு நம்

4. பு செய்வானும் சே . . . . . (தி)ருவாய் மொழிந்தருளினபடி இப்பரமஸ்வாமிகள் திருவாடித் திருநாளிலும் ஐப்பசித் திருநாளிலும் மார்கழித் திருவத்தியயனமாக ஸ்ரீமாஹேஶ்வரர் உண்பதாக முத்தூற்றுக் கூற்றத்துக் கப்பலூரான உலகளந்த சோழநல்லூருடையான் ஸ்ரீராமன் மாயவன்தானான மூன்று கரையார் செய்வித்த தானமடத்துக்கு மடப்புற இறையிலியாக திருக்கானப் பேர்க் கூற்றத்து இராசராச நல்லூரில் இ

5. வர் காணியான நிலத்தில் இவ்வூர் கடமை இறுக்கும் கோலால் ஊர் பிறித்து வேறுமுதலாக்கிச் சுந்தரத் தோள் விளாக(மெ)னும் பேரால் இரண்டேகால் வேலி நிலம் கடமையந்தராயமுந் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலி சந்தி விக்கிரகப் பேறும் வினியோகமும் மற்றுமெப்பேற்பட்டனவும் யாண்டு பதின்மூன்றாமான்டு முதல் இறுப்பதாக இடப்பெற வேணுமென்று

6. முன்பு இப்பரம சுவாமிகளுக்குத் திருப்பள்ளித் தொங்கல்ப்புற இறையிலியாக இராஜராஜ நல்லூரில் இம் முனையதரையன் நிலத்தில் இவ்வூர்க் கடமையிறுக்கும் கோலால் இட்ட நிலம் வேலியும் வேறு பிறித்து வேறு முதலாக்கி இச்சுந்தரத் தோள் விளாகத்தே வேர்(புற)வாக்கித் திருப்பள்ளித் தொங்கலுக்கு கூட்டின நம் நத்தங்களுக்கு மேறியுமிருத்தூறு கூறும் மஞ்சட் காப்புக்கும் சாந்து சாத்தியருளவு

7. ம் செல்வதாக இடப்பெற வேணுமென்று மழவராயன் நமக்குச் சொன்னமையில் திரு(மாலிருஞ்)சோலை நின்றருளிய பரமசுவாமிகள் திருவாடித் திருநாளிலும் ஐப்பசித் திருநாளிலும் மார்கழித் திருவத்தியயனத்து ஸ்ரீமாஹேஶ்வரர் உண்பதாக முனையதரையன் செய்வித்த குலசேகர திருமடப்புற இறையிலியாக திருக்கானப் பேர் கூற்றத்து ராஜராஜ நல்லூரில் இவர் காணியான நிலத்தில் இவ்வூர் கடமை

8. இறுக்கும் கோலால் நிலம் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப் பேறும் வினியோகமும் மெப்பேற்பட்டனவுமுட்பட யாண்டு பதின்மூன்றா வதினெதிர் பதின்மூன்றாமாண்டு முதல் இடுகவென்று முனையதரையன் (நமக்குச் சொன்ன) மையில் இப்பரமசுவாமிகளுக்குத் திருப்பள்ளி

9. த் தொங்கல்புற இறையிலியாக இராஜராஜ நல்லூரில் இமுனையதரையன் காணியான நிலத்து இப் . . . .ட்டை இறுக்குங் கோலால் இட்ட நம

வேலியும் ஊரிற்பிறித்து வேறு முதலாக்கி இச்சுந்தரத் தோளுடையான் விளாகப் புரவாக்கி திருப்பள்ளித் தொங்கலுக்கு கட்டின நிவந்தங்களுக்கு எம்மிலிசைந்து

10. திருமஞ்சள் காப்புக்கும் சாந்து சாத்தி அருளவும் செய்வதாக இடுகவென்று வரியிலார் எழுத்திட்ட உள்வரியும் நம் கேழ்வியும் தரச் சொன்னோம் இப்படி சந்திராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெட்டுவித்துக் கொள்க (என்று) திருவாய் மொழிந்தருளினார் இவை பெரிய . . . . தேவன் எழுத்து இவை பரளை நாட்டு உத்

11. . . . . . முடையான் பொன்னன் சூரிய தேவனான சேதிராய பல்லவரையன் எழுத்து இவை தென்னவராயர் எழுத்து இவை விராடராயன் எழுத்து இவை

A 1. திரிபுவனச் சக்கரவத்திகள் கோனேரின்மை கொண்டான் கீழிரணிய முட்டத்துத் திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமசுவாமிகள் கோயில் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் நம்பு செய்வானுக்கும்

2. இப்பரம சுவாமிகள் திருவாடித் திருநாளிலும் ஐப்பசித் திருநாளிலும் . . . . . . உண்பதாக . . . . . . கப்பலூரான உலகளந்த சோழ நல்லூர் கப்பலூருடையானான நம் இளையவித்தானான முனையதரையன் . . . . . . குலசேகர மடத்து . . . . . இறையிலியாக திருக்கானப்

3. (பேர் கூற்றத்து) உடையார்

த.நா.அ. தொல்லியல் துறை　　　　தொடர் எண் : 261/2003

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 3 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 57 Part - I |
| அரசன் | : | – | | | |
| இடம் | : | முதல் திருச்சுற்று சுவர் மேற்கு வெளிப்புறம் | | | |

குறிப்புரை : கல்வெட்டின் நடுப்பகுதி தூணுக்குள் மறைந்துள்ளது. இவ்விறைவர்க்கு நடைபெறும் திருவாடித் திருநாாள், ஐப்பசித் திருநள், சித்திரைத் திருநாள் முதலானவற்றிற்கு மடப்புற இறையிலியாக இடப்பட்ட 2¼ வேலி நிலம் பற்றிய செய்தியினைத் தெரிவிக்கிறது. இந்நிலம் உள்ள பகுதியினை பழைய ஊரிலிருந்து பிரித்து புதிய பெயரான 'சுந்தரத் தொளுடையான் விளாகம்' எனப் பெயரிடப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கல்வெட்டு :

1. ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு ௩ ஆவது ந . . . . . . . . . இறையிலி இட்ட . . . . படிக்கும் உள்வரி
2. கீழிரணிய முட்டத்து திருமாலிருஞ் சோ(லை நின்ற)ருளிய பரமஸ்வ(ாமிகளுக்கு) திருவாடித் திருநாளிலும் ஐப்பசித் தி
3. ரு நாளிலும் சித்திரைத் திருநாளிலும் . . . . திருவத்தியன் . . . . பதாக முத்தூற்றுக் கூற்றத்து
4. கப்பலூரான உலகளந்த சோழநல்லூ . . . . . ருடையான் சிறு . . . முனயதரையர் செய்வத்த குலசேகர
5. ன் மடத்துக்கு மடப்புற இறையிலியாக திருக்கானப்பேர் (ராஜ)ராஜநல்லூரில் இவர் காணியான நிலத்து . . . .
6. ா(கட)மை இறுக்குங் கோலால் ௫ᐟஉவ இந்நிலம் இரண்(டே காலும்) பிரித்து வேறு முதலாக்கி சுந்தரத் தோள்வி(ளாகம் எ)
7. ன்னும் பெயரால் கடமையும் அந்தராயமும் கற்பூர விலை நீ . . . . பாட்டமும் பஞ்சு பீலி சந்து விக்கிரகப்பேறு . . . . .

8. போகமும் மற்றும் எப்பேற்பட்டனவும் உள்ப்பட பதின் செ . . . . முதல் இறுப்பதாக இட்டமைக்கும் முன்பு . . . .

9. மாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிகளுக்குத் திரு . . . . . . . . இம் முனையதரையர் இவ்விராஜர

10. ராஜநல்லூரில் இவ் காணியான நிலம் . . . . ணம் . . . லால் ருஙகூ இந்நில வேலியும் ஊரிற் பிறித்து

11. வேறு முதலாக்கி இச் சுந்தரத் தோளு . . . . . . . கூட . . . . க்கி இத்திருப்பங்களுக்கு கட்டின நிமந்தத்துக்கும் மே

12. ல் மிகுதி உள்ளிட்ட மஞ்சள் காப்புக்கும் சாந்து சாத்து . . . . செல்வதாக இ புறவரி திணைக்கள நாயகம் மிழலைக் கூ

13. ற்றத்து வடபாம்பாற்று தியூருடையான் வேளான் உதைய . . . ரையன் எழுத்து (இவை) புரவரிதிணைக்களநாய(கம்) மிழலைக் கூற்றத்து

14. நடுவிற் கூற்றத்து ஸ்ரீபராந்தக நல்லூர் இரும்பாழி உடை . . . ருடைக் கண்காணி இராஜராஜ பல்லவதரையன் எழுத்து

15. இவை புரவரிதிணைக் கள நாயகம் வடதலைச் செம்பில் நா . . . . . ன் அழகிய பாண்டிய நல்லூர் சோழதேவன் அழகிய பாண்டிய . . .

16. ள்ளான் வில்லவராஜ னெழுத்து இவை மிழலைக் கூற்றத்து நடு(விற் கூற்று) பொன் பற்றி உடையான் திருப்பூவனம் (உடையா)ன் திருவாரூர் தேவ

17. னான விசையதரையன் எழுத்து இவை சேதரப் பல்(லவராயன்) எழுத்து இவை விராடராயன் (எழுத்து) இவை பொத்தப்பி . . . . .

18. த சோழன் எழுத்து இவை . . . .யரையன் எழுத்(து) இவை . . . ம கச்சசெ(ன) . . . . ழுத்து (இவை) மனராயன் எழுத்து இவை(வ) . . . .

19. ற்று பொதுவக் குடையானான . . . . ண . . . ன் வயிர . . . . . ன . . . (எழு)த்து இவை புரவரி தி . . .

## த. நா. அ. தொல்லியல் துறை

**தொடர் எண் : 262/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 57 Part II |
| அரசன் | : – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மேற்குப்புறம் வெளிச்சுவர்

குறிப்புரை : தொடக்கமும் முடிவுமில்லாத இக்கல்வெட்டு, இவ்விறைவர்க்கும், வைணவர்கள் உணவருந்துவதற்கும் ஒன்னரை வேலி நிலம் தானமாக வழங்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது.

## கல்வெட்டு :

1. க் கோயில்த் தி(ரு)ப்பதி ஸ்ரீவெஷ்ணவர்களுக்கு மிழலைக் கூற்றத்து கீழ்க் கூ . . .
2. நல்லூர் ஸ்ரீ . . கள் போஜன ருக்கு எக . . . . க்கும் ஆ . . . முதளுக் . . . .
3. ரிய வாராச்சியும் வெட்டிப் பாட்டமும் புறு . . . . தின வரப் பெ . . . .
4. அமைத்த நாராயணன் மடத்த . . . ம் வது . . . க்கிற . . . யான விலை கொ . . .
5. குமுந்தடிப் பதக்கும் தருவதான அச்சும் காரிய வாராட்சியும் வெட்டி
6. வதாகக் கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிவி . . . . குடி நாட்டுக்(கு)
7. டியூரன் எழுத்து இவை கருங்குடி நாட்டு கீணெ . . . . நக்கனிர . . . .
8. ள்ள தட்டாமரைக் கதல் . . பாது வினி . . . . றத்தி . . . .
9. லாம் பூதலன் சூழ்வா . . . . . யிதயமும் தநாற் கோட
10. து நில கடமையின் . . . . . . ருதனராயகன்

11. னயில் சூடாமணி மிழ . . . . டெருத்து உந்த . . . . இணையிலாகிற
12. ள்ளியறை கூடத்துப் ப(ள்ளிப்)பீடம் மழவராயனில் எழுந்தருளி
13. யன் மடத்திலும் திருமாலிருஞ் சோலை திருப்பதியில் சேவித்த வரை . . .
14. இறுக்குங் கோலால் ஒன்னரை வேலி நிலம் அந்தராயமும் வினியோ(கமும்) . . . .
15. க்குச் சொன்னமையில் இவ்வாணாதிராயன் இக்கோயில்
16. நிலத்துப் பெரும் பூவுங் குறுவையும் விளையு நிலத்து இறுக்குங் (கோலால்) . . . .
17. ரியு நம் வோலையும் தரச் சொன்னோம் கைக்கொண்டு இப்படி சந் . . .
18. ல்லவராயனெழுத்து உள்வரி மிழலைக் கூற்றத்து கீழ்க்கூற்றுத் தச்சனூர்
19. (மே)லைத் திருப்பதியில் சேவித்த . . . . த்த நாராயண மடத்திலும்
20. ப்பேர்பட்டனவும் உழ்ப்பட . . . ணிமாண்டிரண்டாவது முதலு
21. வாராச்சியும் வெட்டிப் பாட்டமும் (பஞ்சு)பீலி சந்து விக்கிரகப்பேறும்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | 13+1+1 |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 58 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் மேற்கு வெளிப்புறம்.

குறிப்புரை : தொடக்கமும் முடிவும் இல்லா துண்டுக்கல்வெட்டு, தேவதான இறையிலியாக இடப்பட்ட நிலம் மற்றும் அச்சு(காசு) முப்பதும் தானமாகக் கொடுக்கப்பட்டது என்பதைக் குறிப்பிடுகின்றது.

## கல்வெட்டு :

1. மொழிந்தருளினார்உ இவை திருவழுதி வளநாட்டு
2. திருமாலிருஞ்சோலை நின்றருளின பரமஸ்வாமிகளுக்கு
3. ாக முட்பட தேவதான இறையிலியாயிருப்
4. . . ா பக்கல் விலை கொண்ட அச்சு ௩௰க்கு படி
5. க்கோலால் குடிகாலுக்கு . . . . வடக்கும் மேலெல்லை இப்பச்சாறன் ஏம்பல் . . . .
6. மூன்றாவதின் எதிராமாண்டி (ன்எதிராமா)ண்டு முதல் அந்தராயமுமாக கலமும் வினியோ
7. . . . . . . . . தேவனான நுளம்பாதராயன் அழகிய பாண்டி கு . . .
8. (திரு)மாலிருஞ் சோலை நல்லூர் . . . . றுமுடையாரால் ஊர்ச் செய்து அந்தராயம் வினியோ . . .

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ், கிரந்தம் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : – | ஊர்க் கல்வெட்டு எண் | : | 59 |
| அரசன் | : – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் மேற்கு வெளிப்புறம்

குறிப்புரை : துண்டுக்கல்வெட்டு. இவ்விறைவர்க்குக் கொடுக்கப்பட்ட நிலதானத்தினைப் பற்றிக் கூறுகின்றது. நிலத்தின் நான்கு எல்லைகள் பற்றியும் இத்தானநிலம் இருந்த ஊர் இராசராசச் சதுர்வேதிமங்கலம் என்ற குறிப்பும் காணப்படுகிறது.

## கல்வெட்டு :

1. . . . ஜமா ந காராண உ வெஉஉ ஸ்ரீமாஷிருஞ்சோ . .
2. . . ம் இரா இராசராச சதுவெ³திமங்கலத்து . .
3. . . க்கும் மயிலாடும் பாறைக்கும் மேற்கு . .
4. . . வடவெல்லை இக்குளத்து நீர் கோ . .
5. நாற்பத் தொன்ப . . .
6. . . காளா அருளாள் திரு . . . .

**த.நா.அ. தொல்லியல் துறை** **தொடர் எண் : 265/2003**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : – |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : – |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : – |
| மொழி | : தமிழ் | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : – |
| அரசு | : வாணாதிராயர் | ஊர்க் கல்வெட்டு எண் | : 60 |
| அரசன் | : புவனேக வீரன் | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் மேற்கு வெளிப்புறம்

குறிப்புரை : முடிவில்லாதது. தொடக்கம் மட்டுமேயுள்ள இத்துண்டுக் கல்வெட்டுகள் நிலதானம் பற்றியும், நிலத்தின் எல்லை பற்றியும் குறிப்பு காணப்படுகின்றது.

## கல்வெட்டு :

1. *ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ*ஹத்து ஹுவநேக(வீ) . . . .
2. பகவதி ஏறுதிருவுடையாளுக்கு மு . . . .
3. குளத்துக்கு கீழெல்லை செந்திரு . . . . .
4. வாயில் கிழக்கடைக் கொம்பில் நி . . . . .

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 266-270/2003

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மாவட்டம் | : | மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : | மேலூர் | வரலாற்று ஆண்டு | : | – |
| ஊர் | : | அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : | தமிழ் | | | |
| எழுத்து | : | தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : | பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 61 - 65 |
| அரசன் | : | – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் மேற்கு வெளிப்புறம்

குறிப்புரை : துண்டுக்கல்வெட்டுகளாகக் காணப்படுகின்றது. நிலதானம் பற்றிய குறிப்புகள் கூறப்பட்டுள்ளன. நந்தவனப் புறமாக விடப்பட்ட நிலதானம் பற்றிய செய்தியும் உள்ளது. இவ்வூரில் கடமையிறுக்கும் அளவுகோலால் அளந்த ஐந்து மா நிலம் பற்றியும் அறிந்துகொள்ள முடிகின்றது.

## கல்வெட்டு :

61. 1. . . . தோம் இவ்வெல்லைக் குட்பட்ட
    2. ாக வந்த பொருள் நமதாக்கி . .
    3. . . . ரலை அழகனான அனந்த நா . . .

62. 1. திருவன . .
    2. டு இவை . . .
    3. க இறை . . .
    4. ஸ்வஸ்திஸ்ரீ . .
    5. லை .

63. 1. . . . விக்கிரம பாண் . . .
    2. . . . றாவது மு . . . . .
    3. . . . திருதரை . . . . .

64. 1. வடவெல்லை மிளகனூர்க் . .
    2. ற்றவிலி யிறுப்பதாக . . . .

3. றம பாண்டிய நல்லூர்க்கா . . .

4. வதான இறையிலியாயிருப் . . .

65. 1. த்து திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிக்

2. ட்டன் அழகன் சவுரியாழ்வானானான திருநறையூர்

3. மற்கும் திருநாடுடைய பிரான் தாதர் திருநந்தவனத்துக்கு

4. க்கு கிழக்கும் மாவுக்கும் தெற்கும் ஆக இந்நான்கெல்

5. . . . புரத்து திருநந்தவனப்புரம் இறையிலியாக

6. வ்வூர் கடமையிறுக்கும் கோலால் ஐஞ்சு மா

7. ற இறையிலியாக இறுப்பதாகத் தந்தோம்

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : மதுரை | ஆட்சி ஆண்டு | : | – |
| வட்டம் | : மேலூர் | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் | : அழகர் கோயில் | இந்திய கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | – |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பிற்பாண்டியர் | ஊர்க் கல்வெட்டு எண் | : | 66 - 68 |
| அரசன் | : – | | | |

இடம் : முதல் திருச்சுற்று மதிள் மேற்கு வெளிப்புறம்

குறிப்புரை : துண்டுக்கல்வெட்டுகளாகக் காணப்படுகின்ற இக்கல்வெட்டுகளின் மூலம் கோயில் வைஷ்ணவர்களுக்குப் போஜனம் உள்ளிட்டனவுக்கு தானம் வழங்கப்பட்டதை அறியமுடிகின்றது. சோனாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியனின் கல்வெட்டொன்றும் தொடக்கத்துடன் மட்டும் காணப்படுகின்றது. சிலரின் பெயர்கள் அவர்கள் வசித்த ஊரின் பெயருடன் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

## கல்வெட்டு :

66 1. த்துக் கீழ்க் கூற்றுத் தச்சனூருடையா . . .
2. க்கும் ஹோஜநமுள்ளிட்டு வேண்டு . .
3. கப்பேறும் மற்றும் எப்பேர்பட்ட . .
4. மவ சக்கர குறண்டி ஷூஷாஸந . .
5. ட்டொழிப்பாட்டம் பஞ்சு பீலி சந்து . .

67. 1. உள்வரியும் நம்மோலையும் தரச்சொன் . . .
2. நின்றான் அழகிய நாராயண மூவேந்த வேளா னெழு(த்து)
3. க்கும் இவ்வாழ்வார்க்குத் திருக்கண்ணுடையமுது
4. குடிகிழவன் பூவானி மாதவனான நுளம்பா தராயன்
5. தைப்பச் சாறனா . . . .

